# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 23 திருவள்ளுவர் ஆண்டு 2053 ஏப்பிரல் திங்கள்


## உள்ளே...













# வேளாண்மைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Agro industry | வேளாண் சார் தொழிற்சாலை |
| Agrobacterium | வேளாண் நுண்ணுயிரியல் |
| Agronomic practice | வேளாண் செயல்முறை |
| Alley crop | ஊடு பயிர் |
| Auxaro meter | (பயிரி) வளர்ச்சியளவி |
| Compost | கலப்பு உரம் |
| Damping off | நாற்றழுகல் நோய் |
| Domesticated crop | பழகிய பயிர் |
| Dry seeding | உலர் விதைப்பு |
| Fertigation | உரப்பாசனம் |
| Fertile soil | வளமண் |
| Green corridor | வேளாண் மண்டிலம் |
| Green crop | பசும் பயிர் |
| Green keeper | புல்தரைப் பேணி |
| Green manure | பசுந்தாள் உரம் |
| Herbigation | களைக்கொல்லி |
| Lactarius | பால் பயிர் |
| Pestology | பயிர்ப்பூச்சியல் |
| Phytochemistry | பயிரி வேதியியல் |
| Phytology | பயிரியல் |
| Rainfed crop | வானவாரிப் பயிர் |
| Root rot | வேரழுகல் நோய் |
| Rotavator | சுழற்கலப்பை |
| Treillage | கொடிமுந்திரிப் பந்தல் |
| White revolution | வெண்மைப் புரட்சி |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 பங்குனி
ஏப்பிரல் திங்கள் 2022

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை – 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

# வாழ்வு மொழி இருக்க வந்த மொழி பேசுவது ஏன்?

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலகெங்கும் வாழ்ந்த ஓர் உலக மாந்தனால்தான் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று சொல்ல முடியும். தமிழே உலகத் தாய்மொழி என்று பாவாணர் கூறுகிறார். தமிழ் உலக மொழிகளுக்கெல்லாம் மூத்த மொழி. தமிழர் நாகரிகமே உலகின் முதல் நாகரிகம். தமிழனே உலகின் முதல் மனிதன். அ, ஆ, இ, ஈ, உ,ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்பன தமிழ்மொழியின் உயிர் எழுத்துகள் என்பது அனைவரும் அறிந்ததே.இந்தவரிசைஅமைப்பைத்தான் நெடுங்கணக்கு என்பர். இவை எழுத்துகளாகத் தோற்றம் பெறுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஒலிக்குறிப்புகளாகப் பேசப்பட்டன. ஆனால் இந்த ஒலிகள் எப்படித் தோன்றின, எந்த வழிமுறையைப் பின்பற்றி நம் முன்னோர் இதனை வடிவமைத்தனர் என்பது நம்மில் பலரும் அறியாதது.

அ – என்ற ஒலி கண் பாவைக்கு அப்பால் சேய்மையைக் குறிக்கும்
அது, அங்கே, அவன், அவள், அவர்கள்..

இ – என்ற ஒலி அண்மையைக் குறிக்கும்.
இது, இங்கே, இவன், இவள், இவர்கள்...

உ – என்ற ஒலி சேய்மைக்கும் அண்மைக்கும் இடைப்பட்டுக் கண்ணுக்குத் தெரிவதைச் சுட்டிக்காட்டும் நோக்கில் அமைந்தது.
உது, உங்கே, உவன், உவள், உவர்கள்....

இவ்வாறு அ, இ, உ ஆகிய மூன்றும் சுட்டொலிகளாக முதலில் தோன்றின. இவற்றைப் பின்பற்றி புதிய ஒலிகள் உருவாகின.

ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கையில் ஒவ்வொரு வகையான இன்பம் கிடைக்கும். சிலருக்குப் பொருள் ஈட்டுதல் இன்பம். சிலருக்குப் பதவி இன்பம். இன்னும் சிலருக்குப் புகழ் இன்பம். ஆனால் பாவேந்தர் பாரதிதாசனுக்கோ எது இன்பம் தருகிறது. தாய்மொழியாம் தமிழ்மொழி இன்பம் தருகிறது என்கிறார். தமிழ் தரும் இன்பத்தைத் தம் பாக்களில் பல இடங்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

"இன்பம் எனப்படுதல் – தமிழ்
இன்பம் எனத் தமிழ்நாட்டினர்
எண்ணுக"

தமிழ் என்ற உடனே இன்பம் தானாக கிட்ட வேண்டும். அந்த இன்பத்தை நீங்கள் உணர வேண்டும் என்றும் நம்மை வழிப்படுத்துகிறார். தமிழ் அமுதம் போன்றது. அமுதம் உண்ணும் போது கிடைக்கும் இன்பம் தமிழ் படிக்கும் போது கிடைக்கும் என்கிறார்.

"தமிழுக்கும் அமுதென்று பேர்!" என்கிறார்.

தமிழைத் தம் உயிரினும் மேலாகப் போற்றுகிறார்.

"செந்தமிழே! உயிரே! நறுந்தேனே!
செயலினை மூச்சினை
உனக்களித்தேனே!
– பாரதிதாசன் இசையமுது –5

தேன் போன்ற தமிழ்மொழிக்குத் தன் வாழ்க்கை முழுவதையுமே தந்தார்.

தமிழ்மொழி செவ்வியல் மொழி. ஒரு மொழி செவ்வியல் மொழி என்று அழைக்கப்பட வேண்டுமானால் அம்மொழி பல கூறுகளைக் கொண்டிருக்க வேண்டும். பழைமையானதாக இருக்க வேண்டும். தனித்துவமான மரபைக் கொண்டிருக்க வேண்டும். தானே எழுந்த மரபாக இருக்க வேண்டும். வேறு ஒன்றிலிருந்து கிளைத்திருக்கக் கூடாது. பெரிய வளமான இலக்கிய திரட்சியைக் கொண்டிருக்க வேண்டும். தமிழ்மொழி இந்த எல்லாக் கூறுகளையும் கொண்ட மிகப் பழைமையான மொழி ஆகும். தமிழின் செவ்வியல் இலக்கியங்கள் மதம்

சாராதவை ; வாழ்வியலைப் பேசுபவை

**உள்ளதை விடுத்து அல்லதை நாடுவது ஏன்?**

நாம் ஆங்கிலம் கற்பது மோகத்தினாலா? அல்லது தேவையினாலா? என்று வினா எழுப்பினால் இன்றும்கூட நம்மிடம் விடை இல்லை. நம்மை ஆண்ட ஆங்கிலேயர்கள் தமது தேவைக்கு ஆங்கிலம் கற்பித்தனர். எந்த ஒரு மொழியையும் கற்க வேண்டாம் என யாரும் கூறவில்லை. தாய்மொழி நம் கண்கள். பிறமொழிகள் அவற்றின்மீது அணியும் கண்ணாடி போன்றவை. கண்கள் திறம்பட இயங்கினால்தானே கண்ணாடி கூடுதல் அழகு. பார்வையே சரியில்லை என்றால் கூடுதலாகக் கண்ணாடி எதற்கு? அதனால் என்ன பயன்? முதலில் அனைவரும் அவரவர் தாய்மொழியைப் போற்றி வணங்குதல் வேண்டும். பயன்பாட்டில் கொண்டுவரல் வேண்டும்.

**"சென்றிடுவீர் எட்டுத்திக்கும் – கலைச்**
**செல்வங்கள் யாவும்கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்!"**

என்ற பாரதிக்கு 12 மொழிகள் தெரியும். இத்தனை மொழிகள் அறிந்த மகாகவிதான்

**"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்**
**இனிதாவது எங்கும் காணோம்"**

என்றார்.

பொதி சுமக்கப் புறப்பட்ட பஞ்சு சுமந்த கழுதை அங்கிருந்து கடற்கரைக்குப் போய் கடைசியில் பொதியைவிட பாரமான உப்புமூட்டைகளைச் சுமந்த கதையாக, தமிழ்ச்சொற்களை விரும்பி ஏற்காது பிறமொழிச் சொற்களைத் தமிழ்ச் சொற்கள் போல் பாவித்து நாள்தோறும் நாம் பயன்படுத்துகிறோம். அவற்றைத் தவிர்த்துத் தூய, தனித்தமிழ்ச் சொற்களை நாம் பயன்படுத்த வேண்டும்.

**இதோ தமிழ்ச்சுவை**

ஒரு புலவர் மன்னனைப் புகழ்ந்து பாடினார். மன்னர் அவருக்கு நூறு ரூபாய் பரிசளிப்பதாகக் கூறி, கொண்டு வந்தார்.

புலவர் : " மன்னா! இருநூறு தருகிறேன் என்றீர்களே"
மன்னர் 200 ரூபாய் கொண்டுவந்தார்.

புலவர் : "மன்னா! முந்நூறு தருகிறேன் என்றீர்களே"
மன்னர் 300 ரூபாய் கொண்டுவந்தார்.

புலவர் : "மன்னா! நானூறு தருகிறேன் என்றீர்களே"
400 ரூபாயைக் கொண்டு வந்த மன்னர், " புலவரே! ஏன் இப்படி மாற்றி மாற்றிச் சொல்கிறீர்கள்?" என்றார்.

புலவர் :"மன்னா! நீங்கள் இரு, நூறு ரூபாய் கொண்டுவருகிறேன் என்றீர்கள். நான் அமரவே இடம் இல்லை அதைச் சொன்னேன். உடனே 200 ரூபாய் கொண்டு வந்தீர்கள். முன் 100 தானே தருவேன் என்றீர்கள் என்றேன். 300 ரூபாய் கொண்டுவந்தீர்கள். நான் 100 ரூபாய் தருவேன் என்றீர்களே என்றேன். உடனே நீங்கள் 400 ரூபாய் எடுத்து வந்தீர்கள். இதுதான் நடந்தது" என்றார். மன்னரும் மகிழ்ந்து மொத்தத் தொகையாக 1000 ரூபாய் கொடுத்தார்.

இதுதான் அருந்தமிழின் ஆற்றல். எண்ணியதை எண்ணியபடி முடிக்கும் ஆற்றல் தமிழ்மொழிக்கும் தாய்மொழிக்கும் உண்டு. எத்துணை உறவுகள்தான் ஈடுகொடுக்க வந்தாலும் மகவுக்குத் தாய் போல் தக்க துணை உண்டோ? அன்னைத் தமிழை ஆற்றல்படுத்த பிறமொழிச் சொற்கள் கலக்காமல் தனித்தமிழ்ச் சொற்களால் பேசுவோம். மொழிக்கு நலமும் வளமும் சேர்க்க அகராதிகள்வழி தாய்மொழிச் சொற்களைப் பாதுகாத்து, இனிவரும் தலைமுறைக்கு நற்றமிழ் பயிற்றுவோம்.

**"தமிழுயரத் தாழ்ந்தான் தமிழன் –அவனே**
**தமிழுயரத் தானுயர்வான் தான்"**

என்றுரைத்த "மொழிஞாயிறு" தேவநேயப் பாவாணரின் கோட்பாடுகளின் அடிப்படையில், சொற்கருவூலங்களான அகராதிகளை உருவாக்குதல், தமிழ்க்கலைச்சொல்லாக்கம் ஆகிய மொழிக்காப்புப் பணிகளை இவ்வியக்ககம்

செயற்படுத்திவருகிறது. இந்த மொழிக்காப்புப் பணிக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "உலக அகராதியியல் வரலாறு அல்லது உலகச் சொற்புத்தக வரலாறு" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், மலேயாவாழ் தமிழறிஞர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின் "தமிழிய மலாயோ பொலினேசிய மொழிகளுக்கிடையிலான தொடர்பும் தமிழ் வேரினின்று கிளைத்த மலாய்ச்சொற்களும்" என்னும் கட்டுரையும், அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்களின், "தமிழ்நாட்டு நாள்காட்டியில் அறுபது ஆண்டுச் சுழற்சிமுறை" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், செங்கமலத் தாயார் கல்வி அறக்கட்டளை மகளிர் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் ஆ. கமலா அவர்களின், "தொல்காப்பியம் வகுக்கும் அகராதியியல் கோட்பாடு" என்ற கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்.

செயலால் பேசுவோம்...

மொழிநலமே இனநலமாம் முழுமாந்தப்
பெருநிலத்தின் பகுதிக்கூறாம்
மொழிநலத்தைச் சிதைத்திடுவோர்
இனஞ்சிதைப்போர்
இனநலத்தின் முளையைச் சீய்ப்போர்
மொழிநலத்தைக் காவாமல் இனமிழந்த
முழுநலன்கள் கோடி கோடி
மொழிநலமே கருத்துநலம் கருத்திலையேல்
வினையில்லை விளைவும் இல்லை!

பாவலரேறு பெருஞ்சித்திரனார்

# உலக அகராதியியல் வரலாறு
## அல்லது
# உலகச் சொற்புத்தக வரலாறு
## 6528 மொழிகள்



அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம். பாரிசு

மொழி கருத்துப் பரிமாற்றத்திற்கு உயிர்நாடி. உலகில் தற்பொழுது 6528 மொழிகள் வழங்கப்படுகின்றன என யுனெஸ்கோ அறிக்கை தெரிவிக்கிறது. ஒரு மொழி அகம், புறம் என இரு அமைப்புகளை உடையது. எழுத்து, இலக்கணம் என்பன அக அமைப்பாகவும், தொல்பொருள் என்பன புற அமைப்பாகவும் உள்ளன. எழுத்து மொழியின் அடையாளத்தைக் காட்ட, சொல் மொழியின் உடைமையை நாட்டுகின்றது. அக அமைப்பான எழுத்திலும், இலக்கணத்திலும் மாற்றங்கள் அதிகம் நிகழ்வதில்லை, ஆனால் புற அமைப்பான சொல்லிலும், பொருளிலும் மாற்றங்கள் பெரிதும் ஏற்படுகின்றன. மொழியின் வளர்ச்சியையும் கருத்து வெளிப்பாட்டுத் திறனையும் வெளிப்படுத்துவதற்குரிய கருவியாகச் சொற்கள் திகழ்கின்றன.

மொழி

அக அமைப்பு — எழுத்து Letter, இலக்கணம் Grammar

புற அமைப்பு — சொல் Word, பொருள் Meaning

சொல்லும் பொருளும் நாணயத்தின் இரு பக்கங்கள் போன்று ஒன்றை விட்டொன்று இணைபிரியாதன. அவற்றிற்கு இடையிலன உறவுதான் மொழி. சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும் இடையே 4 விதமான உறவுகள் காணப்படுகின்றன. அவை

1. ஒரு சொல் பல பொருள் தன்மை – Polysemy
2. பல சொல் ஒரு பொருள் தன்மை – Synonymy
3. எதிர்த்தன்மை – Antonymy
4. மீச் சொல் – உட்பொருள் சொல் தன்மை – Hypernymy – Hyponymy

இவ்வகைப் பொருள் உறவுகளைச் சுட்டும் பகுதியாகச் சொற் பொருண்மையியல் (Semantics) அமைகின்றது. சொற்பொருள் குறித்த இக்கூறுகள் அகராதித் தொகுப்பில் தனியிடம் (Compiling Dictionary) பெறுகின்றன.

## எழுத்துகளை உருவாக்கியவர்கள் ஃபோனிசியர்கள் (Phoenicien)

## Alphabets – Alphabetum – Alphabetical Order

மொழிகளின் வரிவடிவமான படங்களே எழுத்துகள் (Letters). ஒரு மொழியின் ஒலிகளைக் (Sound) குறிக்கப் பயன்படும் வடிவங்களின் தொகுப்பு. ஆனா ஆவன்னா அல்லது நெடுங்கணக்கு (Alphabets) எனப்படுகின்றது. உலகில் உள்ள மெழிகள் அனைத்தும் அவற்றின் மூலமே அறியப்படுகின்றன; அடையாளப்படுத்தப்படுகின்றன. ஆனா ஆவன்னா தான் மனிதனின் அனைத்து அறிவுகளுக்கும், அவனுடைய எல்லா அவிவின்மைகளுக்கும் மூலம். மொழியின் எழுத்துகள் இல்லை எனில் இலக்கணம் இல்லை, இலக்கியம் இல்லை, சொற்கள் இல்லை, அகராதிகள் இல்லை. இதனால் தான் ஐரோப்பிய மொழிகளில் அகராதிகளுக்கு "Alphabe–tum" Abcedarium எனவும் பெயர் நிலவின.

மொழிகளின் நெடுங்கணக்கின் முதலிரண்டு எழுத்துகளைக் கொண்டே அவற்றின் நெடுங்கணக்கு அழைக்கப்படுகின்றன. தமிழில் ஆனா ஆவன்னா அநேக ஐரோப்பிய மொழிகளில் (Alphabets) எனவும் பெயர் கொண்டுள்ளன. Alphabets என்பது கிரேக்க மொழியின் முதலிரண்டு எழுத்துகளான "alpha அல்ஃபா, Beta – பீற்றா என்பன இணைந்து Alphabet எனும் சொல் பிறந்தது. இக் கிரேக்க எழுத்துகள், எழுத்துகளை உருவாக்கிய ஃபோனிசிய மொழியின் முதலிரண்டு எழுத்துகளான "Alef – அலெஃப்', "Beit – பெத்" என்பவற்றிலிருந்து தோன்றின. அலெஃப் என்றால் மாடு எனவும், பெத் என்றால் வீடு எனவும் பொருள். அல்ஃபா, பீற்றா ஆகிய எழுத்துகளின் வரிசையே Alphabetical Order அகர வரிசை எனப் பெயர் கொண்டது. இதனாற்றான் இடைக்காலத்தில் அகராதிகளில் சொற்கள் Alphabetical Order இல் நிரல்படுத்தப்பட்டன.

தொடக்க காலத்தில் அகராதிகள் "Thematic Order" பொருட்புலவரிசை அடிப்படையில் சொற்கள் அமைக்கப்பட்டன. இவ்வமைப்பினை அகராதிகள் எல்லா மொழிகளிலும் காணலாம். Alphabetical Order மூலமே சொற்களைக் கண்டுபிடிப்பது சுலபம். இதன் அடிப்படையில் தமிழிலும் அகரவரிசை எனும் சொல் தோன்றியது, அகர வரிசை என்றால் அகராதி என்பதையும் குறிக்கும்.

## Thematic Order – Alphabetical Order

## Alphabetical Order – Dictionary Order

பொருட்புல வரிசை முறைக்கும், பின்னர் நடைமுறையில் வந்த அகர வரிசை முறைக்கும் கிட்டத்தட்ட 1000 ஆண்டுகள் போட்டி நிலவியது. பொருட் புலவரிசையில் தெய்வம், ஆகாயம், என்பவற்றிற்கு உயருரிமை கொடுக்கப்பட்டது. இவ்வகை முறையைத் தொல்காப்பியத்திலும், நிகண்டுகளிலும் காணலாம்.

> தெய்வம் உணாவே மாமரம் புள் பறை
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> அவ்வகை பிறவும் கருவென மொழிப.
> – தொல்காப்பியம் – 964,

ஐரோப்பியாவில் அகராதிகளைப் பொருட்புல வரிசை இல்லாமல் அகர வரிசையில் தொகுத்தவர்கள் தெய்வ நிந்தனைக்கும் மதத்தண்டனைக்கும் உள்ளாக்கப் பட்டனர். தமிழில்

நிகண்டுகளை விளங்கிக் கொள்வதில் கடினம் இருந்தமைக்கு அகரவரிசை முறை இல்லாததும் முக்கிய காரணம் ஆகும். அகரவரிசை அடிப்படையில் தான் முதன்முதல் தமிழில் அகராதி நிகண்டு எனும் பெயரில் ஓர் நிகண்டு 1594 இல் புலியூர் சிதம்பர ரேவண சித்தர் என்வரால் யாக்கப்பட்டது. ஆனால் அகரவரிசை முறை முழுமையாகப் பின்பற்றப்படவில்லை. தமிழில் அகரத்தை ஆதியாகக் கொண்ட முறையில் சொற்களுக்குப் பொருள் கூறப்பட்டுத் தொகுக்கப்பட்டன; அகராதிகள் என அழைக்கப்பட்டன. அகராதி எனும் இச்சொல்லில் வந்த 'ஆதி' என்ற சொல் வடசொல் எனக் கருதப்பட்டதால், அகராதியானது அகரமுதலி எனத் தனித்தமிழ்ப் பெயர் கொடுக்கப்பட்டு அச்சொல் இன்றுவரையும் வழக்கில் உள்ளது. ஆயினும் அகர முதலி என்பதை விட அகராதி என்பதே பலராலும் எளிதில் பொருள் கொள்ளக்கூடியதாக உள்ளது.

ஃபோனிசியர்களே மனிதகுலத்தின் மொழி எழுத்துகளை முதலில் உருவாக்கியவர்கள். ஐரோப்பியர்களே Al–phabetical Order முறையை உலகத்தவர்க்கு அறிமுகப்படுத்தியவர்கள். தேவநேயப்பாவணரே அகராதி என்பதனை அகரமுதலி எனத் தனித்தமிழ்ப்படுத்தி தனது அகராதிகளில் பயன்படுத்தியவர். இவர் அகரவரிசை முறையை வண்ணமாலை முறை எனவும் கையாண்டார்.

ஃபோனிசியர் உருவாக்கிய Alef, Beth ஆகியன தலைகீழான மாட்டின் தலையையும், வட்டமான இரண்டு அறைகள் கொண்ட வீட்டையும் சுட்டி நிற்கின்றன. இவை முறையே A, B என ஐரோப்பிய மொழிகளில் எழுத்துகள் ஆகின.

அகராதி

அகரமுதலி — அகரவரிசை

தொல்காப்பியம் போய் நிகண்டு வந்தது
டும்! டும்! டும்!
நிகண்டு போய் அகராதி வந்தது
டும்! டும்! டும்!
அகராதி போய் நோக்கு நூல்கள்
வந்தது டும்! டும்! டும்!
அறிவியல் வழி மின்னகராதி
வருகிறது டும்! டும்! டும்!

## அகராதி DICTIONARY சொற்புத்தகம்

அகராதி என்பது மொழியின் பாதுகாப்புச் சொத்து. அகராதிகள் மொழிகளின் நாகரிகங்களையும், மக்களின் வளர்ச்சியையும் பிரதிபலிப்பனவாக விளங்குகின்றன. பொதுவாக அக்காலத்தின் அடிப்படையில் அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறும் முயற்சியின் விளைவாகத் தொகுக்கப்பட்டவையே அகராதிகள். மொழியிலுள்ள சொற்களை அகரவரிசை ஒழுங்கில் தொகுத்து அவற்றின் பொருள்களைக் கூறும் நூல் அகராதி ஆகும்.

பயனாக்க மொழியில் அடிப்படையில் சொற்கள் தொடர்பாக எழும் வினாக்களுக்கும், ஐயங்களுக்கும் விடையளிப்பதற்குப் பயன்படும் மொழிக் கருவியே அகராதி.

## அகராதியின் பயன்பாடு

மொழி அகராதிகள் மொழிச் சொற்களைப் பாதுகாத்து வைப்பதில் காப்பகம் (Treasure House) ஆகவும், மொழியைப் பயன்படுத்துவோருக்கு ஏற்படும் ஐயங்களை நீக்குவதில் தீர்ப்பகம் (Clearing House) ஆகவும் இலக்கணம், பொருள் மற்றும் பயன்பாடு தொடர்பான சிக்கல்களைத் தீர்த்துவைப்பதில் நீதிமன்றம் (Court House) ஆகவும் செயற்படுகின்றன. மொழியின் செம்மையாக்க முயற்சியில் அகராதிகள் பல நிலைகளில் துணைபுரிகின்றன. மேலும் மொழிச் சமுதாயத்தின் கலாச்சார பண்பாட்டை வெளிப்படுத்துவதிலும் அகராதிகள் பெரிதும் துணைபுரிகின்றன.

பயன்பாட்டு ரீதியில் அகராதி என்பது ஒரு மொழியின் ஆதியும் அந்தமுமாக (Alpha and Omega) அமைகிறது.




## சொற் புத்தகம்

அகராதியானது தமிழில் அகரவரிசையில் தொடங்கிச் செல்லும் சொற்கூட்டம் எனப் பொருள் தருகிறது. ஆனால் பெரும்பாலான மொழிகளில் குறிப்பாக இலத்தீன், ஆங்கிலம், பிராஞ்சு, இஸ்பானியம் முதலான மொழிகளில் Dic-tio(n) என்பதனை முன்னொட்டாகக் கொண்டும் wort, word, ordet, என்பவற்றை முன்னொட்டாகக் கொண்டும் சொற் புத்தம் எனப் பொருள் தருகின்றன.

**தொல் அகராதி – Proto Dictionary**
**மன அகராதி –Mental Dictionary**
**மூளை அகராதி – Brain Dictionary**

இப்போது வழங்கப்படும் அகராதிகளுக்கு முன்னோடியாக அமைக்கப்பட்டவை தொல்லகராதிகள் என அழைக்கப்படுகின்றன. தொல்லகராதிகளின் வரலாறு பேச்சு மொழியினை எழுத்து வடிவில் அமைக்கத் தொடங்கிய பொழுது உருவாகியது. மனிதனின் மூளையில் சொற்களைச் சேமித்து வைத்திருக்கும் சொற்கள் மூளை அகராதி Brain Dictionary எனவும், அவற்றைப் பேச்சில் கையாளும் பொழுது பயன்படுத்தும் சொற்கள் மன அகராதி Mental Dictionary எனவும் வழங்கப்படுகிறது.

தொல்லகராதிகளை உருவாக்கியவர்கள் சுமேரியர்கள். அதனால் அன்று சுமேரியா என அழைக்கப்பட்ட இன்றைய ஈராகின் ஒரு பகுதி அகராதியியலின் தொட்டில் (அதாவது) சுமேரியா அகராதியியலின் தொட்டில் (Cradle of Lexicography) என அகராதியியலாளர்களால் உவந்து கூறப்படுகிறது. சுமேரியர்கள்

| இலத்தீன் | பிரெஞ்சு | ஆங்கிலம் | ஜெர்மன் | டச்சு | டேனிஷ் |
|---|---|---|---|---|---|
| Dictionarius | Dictionaire | Dictionary | Wortbuck | woordenbuck | Wordbog |

உலக மொழிகளில் அகராதியைக் குறிக்கப் பல சொற்கள் இருந்தாலும், டிக்ஷனரி, வொக்கப்புலறி, லெக்சிக்கன், ரெசறஸ், புக் என்பனவே பரவலாக வழங்கப்படுகின்றன. ஆனால் இச் சொற்களில் Vocabulary, Treasurus என்பன பழைய சொற்கள் ஆகும்.

டிக்ஷனரி – Dictionary
வொக்காப்புலறி – Vocabulary
லெக்சிக்கன் – Lexicon
ரெசறஸ் – Treasurus

களிமண்ணில் ஆணிகளால் செய்த ஆப்பெழுத்து களிமண் கட்டிகளில் சொற்பட்டியலைச் சுட்டார்கள். அவர்களின் களிமண் கட்டிச் சொற்பட்டியல் கிடைக்கப் பெறவில்லை. சுமேரிய அகராதி முயற்சி தொல்லகராதியியலுக்கு (Paleo – Lexicog-raphy) வித்திட்டது. இதனைத் தொடர்ந்து Uruk எனும் ஊரில் Sumerian Akkadian இருமொழித் தொல்லகராதி கிடைக்கப்பெற்றது. இவ்வகைச் சொற்பட்டியல் Lisanu விஸானு என் அக்காடியன் மொழியில் அழைக்கப்பட்டது.

## மொழிகளும் தொல்லகராதிகளும்

| மொழி | தொல்லகராதி |
|---|---|
| 1.சுமேரியன் அக்காடியன் | Lisanu |
| 2.சீனம் | Erya |
| 3எகிக்தியன் | Hubris |
| 4.ஹீப்ரூ | Midrash |
| 5.அரபு | Kitab–alayn |
| 6.ஈரான் | Logat e – fors |
| 7.இந்தியா சமஸ்கிருதம் | Nighantu |
| 8.தமிழ் | Tolkappiyam |

## இந்திய அகராதியியல்

| சமஸ்கிருதம் | தமிழ் | கன்னடம் | தெலுங்கு | மலையாளம் |
|---|---|---|---|---|
| கோசம்<br>சிந்தாமணி<br>மாலா | உரியியல்<br>நிகண்டு<br>அகராதி | தர்ப்பணா<br>மஞ்சரி<br>சப்தசாகரா | கோசமு<br>தீபிகா<br>ரத்னாகரம் | நிகண்டு<br>தாராதுளி<br>கருவூலம் |

## முன்னகராதி – Pre Dictionary மாலா

Dictionnaire என்ற சொல் முதன் முதலில் இத்தாலியில் புழக்கத்தில் வந்தது. Ambrogio Calepino என்ற இத்தாலிய அறிஞர் 1502 இல் Dictionnaire Polyglotte எனும் இலத்தீன் இத்தாலியம் பிரெஞ்சு பன்மொழி அகராதியை எழுதினார். அடுத்து இங்கிலாந்தில் Thomas Elyot என்பவர் 1538 இல் Dictionary Latin – English அகராதியைத் தொகுத்தார்கள். பின்னர் பிரான்சில் Robert Estienne என்பவர் 1539இல் Dictionaire: Francois – Latin எழுதினார்.

## ஐரோப்பியத் முன்னகராதிப் பணிகள்

கி.பி. 5ஆம் நூற்றாண்டில் கிரேக்கத்தில் Protoguras தொகுத்த சொற் புத்தகமே, முதலாவது அகராதியாகக் கருதப்படுகிறது. முதலாம் நூற்றாண்டில் Verrius Flaccus என்பவரால் இலத்தீனில் சொற்களின் பொருள் எனும் அகராதி படைக்கப்பட்டது. Aelfricde Canterbury என்ற ஆங்கிலேய மடாதிபதி 922 – 1002 காலப் பகுதியில் இலத்தீன் சாக்ஸன் சொல்லகராதியைத் தொகுத்தார். John of Garlan de 1220இல் ஆங்கிலம் பிரஞ்சு இத்தாலியன் இலத்தீன் அகராதியை Dictionarius என்ற பெயரில் எழுதினார். Glossarium latinum இலத்தீன் ஜெர்மன் அகராதியை Jakob Twinger 1380 – 1390 காலப் பகுதியில் யாத்தார். பிரான்சில் முதல் அகராதியைத் தொகுத்து அச்சிட்டவர் Robert Estienne ஆகும். இவரே பிரஞ்சு அகராதியியலின் தந்தை ஆவார். ஐரோப்பிய பொது அகராதியாக 1612 இல் Florentine Academy அறிஞர் குழுவினால் தொகுக்கப்பட்ட குறுஸ்கா Vocabulario degli Academici de Grusca என்ற இத்தாலிய மொழிச் சொல்லகராதியாக இடம் பெறுகிறது. இதுவே அறிஞர் குழுவினால் தொகுக்கப்பட்ட அகராதியாக விளங்குகிறது.

கி.பி. 1616இல் George Henis என்பவர் Thesaurus Linguae at Sapientiae Germanicae எனும் ஜெர்மணி அகராதியைத் தொகுத்தார்.

Robert Cawdrey 1604 இல் A Table Alphabetical எனும் ஆங்கில அகராதியைத் தொகுத்தார். பிரான்சில் Estien ne, Nicot

வுக்கு பின்னர் Richelet, Furetiere என்பவர்கள் தொகுத்தளித்தார்கள். பிரான்சில் Le Dictionnaire, Francais எனும் முறைசார் அகராதி 1680 இல் வெளிவந்தது. அகாதமி பிரான்ஸேயின் அகராதி 1694இல் வெளியானது.

பிரான்சில் அகராதியியல் ஓர் பெருந்துறையாக வளர்ந்துவிட்டது. இங்கே அகராதிகளை வெளியிடுவதில் Larousse, Robert, Hachette என்கிற அகராதியியல் நிறுவனங்கள் வெற்றி பெற்று ஆண்டு தோறும் பல்தரப்பட்ட வெவ்வேறு அகராதிகளைத் தொகுத்து வழங்கி வருகின்றனர்.

பிரான்சில் ஒவ்வொரு ஜூன் மாதமும் அகராதி நிறுவனங்கள் பல்வேறுபட்ட பயனாளர்கள் கருதி வெளியிட்டு வருகின்றன. ஜேர்மனி, இங்கிலாந்து மற்றைய நாடுகளிலும் அகராதியியல் நன்கு வளர்ச்சி அடைந்து உள்ளது.

## தமிழ் அகராதியியல் வரலாறு

ஐரோப்பாவில் பரவலாகத் தொகுக்கப்பட்ட ஒரு மொழி, இருமொழி மற்றும் பன்மொழி அகராதிகளின் தாக்கம் இந்தியா, இலங்கையிலும் ஏற்றம் கண்டது.

இந்நாடுகளில் கிறிஸ்தவ மதத்தைப் பரப்ப வந்த மதகுருமார்கள், தங்கள் மதங்களைப் பரப்புவதற்காக இந்நாட்டு மொழிகைளைக் கற்றதோடு நின்றுவிடாமல் இங்குள்ள மொழிகளை ஆழ்ந்து கற்று இலக்கணங்களையும் அகராதிகளையும் தொகுத்தார்கள். இந்த வகையில் முதல் தமிழ் அகராதியியலாளராக Henrique Henrique எனும் போர்துக்கேயரே. தமிழில் முதலில் தொகுக்கப்பட்டது இருமொழி அகராதியே. Vocabulario Tamilico Com a Significacam Portugueze எனும் தமிழ் போர்த்துக்கேய அகராதியை Antao Proencae 1679இல் தொகுத்தார். இவரே தமிழில் முதல் இருமொழி அகராதியைத் தொகுத்த பெருமைக்கு உரியவர்.

தமிழில் முதல் ஒரு மொழி அகராதியினை சதுரகராதி எனும் பெயரில் இத்தாலியரான Constatin Joseph Beschi என்பவர் தொகுத்ததனால், தமிழ் அகராதியியலின் தந்தையாகப் போற்றப்படுகிறார். இவருக்குப் பிற்பாடு பல ஐரோப்பிய மதகுருமார்கள் தமிழுடன் சேர்ந்து வேறு மொழிகளுடன் சேர்த்து இருமொழி, மும்மொழி அகராதிகளையும் தொகுத்த பெருமைக்கு உரியவர். வீரமாமுனிவர் எனப் பின்னாளில் அழைத்துக் கொண்ட Beschi. இவருக்குப்பின்னர் ஜேர்மனியர்களும், பிரெஞ்சியர்களும், ஆங்கிலேயரும் பல அகராதிகளைப் பல கஷ்டங்களுக்கு மத்தியிலும் தொகுத்து வெளிக்கொணர்ந்தனர். இவ்வைரோப்பியர்களுக்குப் பின்னரே இலங்கையில் அமெரிக்கன் மிஷன் சில தமிழறிஞர்களுடன் இணைந்து தமிழ் அகராதியியலின் வளர்ச்சியில் பெருமுயற்சி செய்து மூன்று அகராதிகளை வெளியிட்டது.

தமிழில் இருமொழி, ஒரு மொழி அகராதிகளை ஐரோப்பிய மத போதகர்கள் இந்தியா, இலங்கையில் கால்கோள் பதித்த பின்னர் யாழ்ப்பாணத்தில் அமெரிக்கன்

மிஷன் மதபோதகர்கள் இலங்கைத் தமிழறிஞர்களுடன் இணைந்து யாழ்ப்பாண அகராதி, வின்ஸ்லோ அகராதி மற்றும் போசிவல் அகராதி முதலானவற்றைத் தொகுத்து அளித்தனர். யாழ்ப்பாணத்து அறிஞர்களான நா. கதிரவேற்பிள்ளை 1899இல் தமிழ்ப் பேரகராதியையும், வைமன். கு. கதிரவேற்பிள்ளை தொகுத்த தமிழ்ச் சொல்லகராதி 1910இல் மதுரைச் சங்கத்தினரால் வெளியிடப்பட்டது. தமிழ் அகராதிகளில் தமிழ்ப் பேரகராதியில்தான் இலக்கணக் குறிப்பான்கள் முதன் முதல் அறிமுகப்படுத்தப்பட்டது.

1980ஆம் காலப் பகுதியில் ஐரோப்பிய நாடுகளில் புலம் பெயர்ந்து வாழும் தமிழர்கள் குறிப்பாக இலங்கைத் தமிழர்கள் அந்நாடுகளின் மொழிகளையும் தமிழையும் இணைத்து இருமொழி அகராதிகளைத் தொகுத்து அளித்தனர்.

இன்று இலங்கையில் அகராதித்

தொகுப்புப் பணிகள் செய்யப்படுவது நின்றுவிட்டது. தமிழ் நாட்டில் பல அகராதிகளில் அகராதியியல் கோட்பாடுகள் மேற்கொள்ளப்படாமல் வெறுமனே ஒரு சொல்லுக்கு இன்னொரு சொல்லைத் தரும் முன்னகராதிகள் போன்று தொகுக்கப்படுவது தமிழ்மீது பற்றுடையயோரை வருந்தவும், அகராதியியல் அறிந்தவர் நகைக்கவும் தக்க முறையில் புற்றீசல் போல் வெளிவருகின்றன. க்ரியாவின் தற்கால அகராதி காலத்துக் காலம் புதுப்பிக்கப்பட்டும், புதுச்சொற்கள் சேர்க்கப்பட்டும் வெளிவருவது பயனாக உள்ளது.

அகராதிகளின் மேம்பாடு தொகுப்பாளரின் அகராதியியல் சார்ந்த அறிவையும், பயன்பாட்டாளரின் தேவையையும் பொறுத்தது. பயன்பாட்டாளர்களின் தேவையை நிறைவு செய்யும் வகையில் அகராதிகள் அமையும் போது, அவை பெரும் வரவேற்பைப் பெறுகின்றன. இதற்கு அகராதியியற்கோணம் தரவு தருகின்றது. இதனை அமைத்தவர் ஜெர்மானிரான Wigend ஆகும்.

## அகராதியியற் கோணம்
## Lexicographic Triangle




ஐரோப்பிய நாடுகளில் வருடத்தில் ஒரு முறை அகராதி மழைத் திருவிழா ஜூன் மாதங்களில் இடம் பெறும் பொழுது புதிய புதிய அகராதிகள் புத்தம் புதுச்சொற்களுடன் புதுக்கோணங்களில் வெளிவருகின்றன. அவ்வாறே உலக அகராதியியல் தினம், 26 மொழிகள் கற்று, 70 வயது வரை பேரகராதித் தொகுப்பில் தன்னை அர்ப்பணித்து, உலகின் மாபெரும் அகராதியைத் தந்த Noah Websterஇன் பிறந்த நாளான 16 அக்டோபர் கொண்டாடப்படுகிறது.

ஊக்கப் தமிழ்நாட்டில் தமிழ் ஒரு மொழி அகராதிகள் தொகுக்கப்படுவது படுத்தப்படவேண்டும். அவ்வகராதிகளில் நடைமுறைச் சொற்கள் அதிகம் சேர்க்கப்படவேண்டும். சொற்களின் பொருள் விளக்கம் காலத்திற்கு ஏற்றவாறு அமைய வேண்டும். புதுச்சொற்கள் புனையப்படும் கால் மொழியியலறிஞர்களுடன் கலந்து அனைவரும் ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் ஆய்வு மேற்கொள்ளப்படவேண்டும். தமிழில் ஒரு மொழி அகராதி மட்டுமன்றி இரு மொழி, மும்மொழி அகராதிகளையும் தொகுத்த வீரமாமுனிவர் எனத் தமிழ்ப்பெயர் பூண்ட Constatin Joseph Beschi யின் பிறந்த தினமான 8 நவம்பர் தமிழ் அகராதியியல் தினமாகக் கொண்டாடப்படுவது அன்னாருக்குச் செய்யும் நன்றிக் கடன் ஆகும்.

நன்றி : தமிழ் அகராதியியலின் பரணாமம் மற்றும் பரிமாணம்

**குலமெனப் படுவதும் தமிழே கோவெனப் படுவதும் தமிழே**

**நலமெனப் படுவதும் தமிழே நாடெனப் படுவதும் தமிழே**

**– தேவநேயப் பாவாணர்**

# தமிழிய மலாயோ பொலினேசிய மொழிகளுக்கிடையிலான தொடர்பும் தமிழ் வேரினின்று கிளைத்த மலாய்ச்சொற்களும்

**இரா. திருமாவளவன்**
**துணைத்தலைவர்,**
**கலைச்சொல்லாக்கக் குழு,**
**மலேசியத் தமிழ்மொழிக் காப்பகம்,**
**மலேசியா**



**(சுருக்கம்:**

இக்கட்டுரை மலாயோ பொலினேசிய மொழியான மலாய்க்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பினை வரலாற்று அடிப்படையிலும், மொழியியல் அடிப்படையிலும் நிறுவ முற்படுகின்றது. தமிழரின் தென்கிழக்காசிய வருகை கிறித்துப் பிறப்புக்கு முந்திய காலத்திலும் அஃதாவது கழகக் காலத்திலும் கிறித்துப் பிறப்புக்குப் பிந்திய காலத்திலும் அஃதாவது சங்கம் மருவிய காலத்திலும் மேற்கத்திய வருகை காலத்திலும் நிகழ்ந்துள்ளது. இதன் பயனாகத் தென்கிழக்காசிய வட்டார மொழியாகிய மலாயில் தமிழ்ச் சொற்கள் விரவிக் கிடப்பதைக் காணலாம். மலாயில் தமிழின் தாக்கம், நேரடிச் சொற்கலப்பாகவும், சமற்கிருதவழிக் கலப்பாகவும் நிகழ்ந்துள்ளதோடு வேர்ச்சொல் அடிப்படையிலும் நிகழ்ந்துள்ளதை இக்கட்டுரை சுட்டுகின்றது.)

மலாய் மொழி தென்கிழக்காசிய வட்டாரத்தில் பலராலும் பேசப்படுகின்ற பேணப்படுகின்ற ஒரு வட்டாரத் தொடர்பியாகும் (lingua franca). இம்மொழி, ஆசுத்துரோனேசிய (Austronesia) மொழிக்குடும்பப் பிரிவில் அடங்கியுள்ள பொலினேசிய (Polynesia) மொழிக்குடும்பத்தைச் சேர்ந்ததாகும். இதனை மலாயோ பொலினேசிய (Malayo Polynesia) மொழிக் குடும்பம் எனச் சிறப்பித்துச் சொல்வர். மொழியியலாளர்கள், தென்சீன தைவானியத்தோடும் உறவுடையதாகக் கூறுவர். தொன்முதுமலாய் இனத்தினர் (Proto Malays) தென்சீனாவின் யூனான் பகுதியிலிருந்து தென்கிழக்காசியப் பகுதிகளுக்கு வந்ததாக ஒரு கருதுகோள் உள்ளது. அவர்களைத் தொடர்ந்து இந்தோசீனப் பகுதிகளிலிருந்து இரண்டாம் முதுமலாயர் (Deutro Malays) வந்தனர் என்றும் வரலாற்றில் குறித்துள்ளனர்.

உலகில் முதுமாந்தப் புதை படிவங்கள் 1891, 1982 ஆம் ஆண்டுகளில் ஆய்வாளர்களால் கண்டெடுக்கப்பட்டன. சாவானிய மாந்தன் (Java man) என அப்புதைபடிவ மாந்தனுக்குப் பெயரிட்டனர். பின்னர் 1921 ஆம் ஆண்டு வடசீனாவில் சோக்கோடியன் (Zhoukoudian) குகையில் பீக்கிங் மாந்தனின் (Peking man) புதைப்படிவம் கண்டெடுக்கப்பட்டது. கடந்த 2015 ஆம் ஆண்டு சுலவெசியில் (Sulawesi) ஒரு பெண்ணின்புதைபடிவம்கண்டெடுக்கப்பட்டது. இது முந்தைய கருதுகோளுக்கு முரணாக ஒரு புதிய செய்தியை வழங்கியது. கடந்த 2021 ஆம் ஆண்டு இது பற்றி ஆய்வு செய்த கிரிபிட் பல்கலைக்கழகப் (Griffith university) பேராசிரியர் ஆடம்புரும் (Prof Adam Brumm) அவர்கள் இவ்விளம்பெண்ணின் புதைபடிவம் ஆத்திரேலிய (Australia) பாப்புவாநியூகினி (Papua New Guinea), மேற்கு பசிபிக்தீவுகள் (Western Pacific Islands) பழங்குடி மக்களோடும் தொடர்புடையதாக இருப்பதாகக் கூறியுள்ளார்.

ஆத்திரேலிய பெருநிலப்பரப்பின் ஊடாக பாப்புவாநியூகினியில் பரவியிருந்த அபர்யனிசு (Aborgeneus) கருப்பின மக்கள் வடக்கு நோக்கிப் பரவியிருக்கலாம். வடக்கிலிருந்து தெற்கு நோக்கிய மாந்தப் பரவலையே ஆய்வாளர்கள் பலர் கூறிவந்துள்ளனர். மலாய் இன மக்களின் தோற்ற அமைப்பு அதற்கொரு கரணியமாக இருந்தது. ஆனால், கருப்பிலிருந்து வடக்கு நோக்கி மஞ்சளாகி பின்னர் மேலும் வெளுத்த கருதுகோளையும் ஆய்வுக்கெடுத்துக்கொள்ள வேண்டியதே. பெசி (Besse) எனப் பெயரிடப்பெற்ற சுலாவெசி புதைபடிவம் 17–18 அகவைக் கொண்ட இளம்பெண்ணினுடையது என்றும் தோராயமாக 7200 ஆண்டுகளுக்கு முன்னால் அங்கு வாழ்ந்திருக்கக் கூடும்

என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இவ்வெளிப்பாட்டின் வாயிலாக மாந்த ஏற்றப் பரவல் கொள்கையே (Ascending theory) இங்குப் பெரிதும் பொருத்துவதாய் உள்ளது.

இப்பகுதி மக்களின் பல்வகை பண்பாட்டுப் போக்குகள், வாழ்க்கை முறைகள் கருப்பின மக்களையே சார்ந்துள்ளன. 2002 ஆண்டு சுபென்சர்வெல்சு (Spencer Wells) அவர்கள் மேற்கொண்ட மரபணு ஆய்வும் இதற்கு அரணாக உள்ளது.

இவ்வடிப்படையில் ஆத்துரோனேசிய மொழிக்குடும்பத்தின் பிரிவான பொலினேசிய (Polynesia) குடும்பத்திற்கும் தமிழிய மொழிக்குடும்பத்திற்கும் தொடர்பேற்பட்டிருக்க பெரிதும் வாய்ப்புண்டு. பாவாணரின் கருத்துப்படி குமரிப்பெரு நிலச் சிதறல்களாகச் சுண்டா ( Sunda ) நிலப்பரப்பும் இருந்துள்ளதாக அறிய முடிகிறது.

தென்கிழக்காசிய வட்டாரத்தில் தமிழரின் தொடர்பு கழகக் காலத்திலேயே ஏற்பட்டுவிட்டதாகவே கழக இலக்கியக் குறிப்புகள் காட்டுகின்றன.

மதுரைக்காஞ்சியில் வரும் பாடல் வரிகளை இதற்கு எடுத்துக்காட்டாய் அறிஞர் பெருமக்கள் காட்டுவர்.

" வானியைந்த இருமுந்நீர்ப்
பேஎநிலைஇய இரும்பவ்வத்துக்
கொடும்புணரி விலங்குபோழ
சீர்சான்ற வுயர்நெல்லின்
ஊர்கொண்ட உயர்கொற்றவ'

(மதுரைக்காஞ்சி:75–88)

எனும் பாடலில் வரும் உயர் நெல்லின் ஊர் என்பது இன்றைக்கு இந்தோனேசியாவில் சாவகத்தீவையே (Jawa) குறிப்பதாக அறிஞர் பெருமக்கள் குறிப்பிடுவர்.

நெல்லினூர் சாலியூர் என்றும் குறிப்பிடப்படும். சாலியூரே சாரியூராகவும் கருதப்படுகின்றது. இன்றும் இந்தோனேசியாவின் நெற்களஞ்சியமாக சாவகமே (Jawa ) விளங்குகின்றது.

ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியன் எனும் பெயரிய பாண்டிய மன்னன் சுமத்துராவில் உள்ள கடற்கரை நகரில் தன் காலடியைப் பொறித்ததாக தமிழ்வரலாறு எழுதிய இரா.இராகவையங்கார் குறிப்பிடுகின்றார். பாவாணரும் இதனை வலியுறுத்துகின்றார். இதனாலேயே ஆழி வடிம்பு அலம்ப நின்ற பாண்டியன் என அப்பாண்டிய மன்னனுக்குப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. ஆழி எனின் ஆழமான பெருங்கடல் என்றும் வடிம்பு எனின் மோதி மோதி வடிந்து செல்லும் அலை என்றும் பொருளாகும்.

பேராசிரியர் முனைவர் முல்யானா சுலாமெட் ( Prof. Dr. **Raden Benedictus SlametMuljana**) எனும் இந்தோனேசிய வரலாற்றாசிரியர் தம் குந்தாளா, சிறிவிசயா, சுவர்ணபூமி (Kuntala Srivijaya Swarnabumi) எனும் அரிய நூலில் இந்தோனேசியா, போர்னியோ ஊர்ப்பெயர்கள் பல தமிழில் இருப்பதாக மேற்கோள் காட்டுகின்றார். குந்தாளா (Kuntala) எனுஞ் சொல்லே கந்தழி எனும் தொல்காப்பியச் சொல்லோடு தொடர்புடையதாக இருப்பதை இச்சொல் தமிழின்திரிபு என அவர் குறிப்பிடுவதன்வழி அறியலாம். இதனை இரா.இராகவையங்கார் மிக விரிவாகவே தம் தமிழ் வரலாற்றில் குறிப்பிடுவதைக் காணலாம். ( காண்க பக். : 339)

கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய
வருமே.
(தொல்: புறத்திணையியல் 33 )

எனும் நூற்பாவே இங்குப் பொருத்திப் பார்க்கப்படுவதாகும்.

மலாயர் எனும் இனப்பெயர், மலையூர் எனும் ஊரிலிருந்து வந்தவர்கள் எனும் பொருளையே தருவதாக அச்சொல் தோற்றத்திற்கான கோட்பாடு விளக்குகின்றது.

மலை>மலையம்>மலையு>மலாயு>மெலாயு. இன்றளவும் இந்தோனேசிய, மலேசிய நில அமைப்பு மலையும் மலைசார்ந்த பகுதியாகவே இருப்பதைக் காணலாம். தஞ்சைப் பெரிய கோயிலில் இடம்பெற்றுள்ள கல்வெட்டு ஒன்றில் காணப்படும் வரலாற்றாசிரியர் பலராலும் குறிப்பிடப்படும் "அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்தி" எனும் பாடல் வரிகளில் இந்தோனேசிய மலைய ஊர்ப்பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. அவற்றில் வன்மலையூர் தொன்மலையூர் எனத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

சாவகத்திற்கு அருகில் உள்ள ஒரு தீவின் பெயர் மதுரா (Madura) என்றே இருக்கின்றது. இத்தீவில் பேசப்படும் ஒரு மொழிக்கு கெறிஞ்சி (Kerinchi) எனப் பெயர். இதனை ஆய்கையில் மலைப் பகுதிகளில் மக்கள் பேசும் மொழி. தமிழின் குறிஞ்சி எனுஞ் சொல்லே உயிர் திரிபு முறையில் கெறிஞ்சி என மாறியிருக்கின்றது. மதுராவும் மதுரை எனும் பாண்டியர் தலைநகரைக் குறிப்பதைத் தெட்டத்தெளிவாகவே காணலாம்.

சுமத்துராவிலுள்ள பாருசு (Barus) எனும் ஊரில் கண்டெடுக்கப்பட்டுள்ள பல்வேறு கல்வெட்டுகள் இந்தோனேசியாவின் தமிழர் தொன்மைத் தொடர்பைத் தெள்ளிதின் சொல்வதாக, இந்தோனேசிய வரலாற்று எழுத்தாளர் அசுபிர் டத்தோ இராஜோ மங்குத்தோ (Asbir Dt. RajoMangkuto, Editor: Asraferi Sabri.) தம் ஆய்வுக் கட்டுரை ஒன்றில் குறிப்பிடுகின்றார். கி. பி. 3 ஆம் நூற்றாண்டு கால அளவில் தமிழரின் மிகப்பெரிய தாக்கம் இந்தோனேசியாவில் ஏற்பட்டது எனத் தம் விரிவான கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

பிற்காலத்தில் இராசேந்திரசோழனின் படையெடுப்பும், திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர் வணிகக்குழாமின் பேரளவான வல்லாண்மையும் மலாயரிடத்து மொழி நிலையிலும், பண்பாட்டு நிலையிலும், பெருந்தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது எனத் துணியலாம். கி.மு, கி.பி. காலக்கட்டங்களில் தென்கிழக்காசியாவில் தமிழரின் ஈடுபாடு இந்தோனேசிய, மலாய்மொழிகளில் தமிழ்ச்சொற்கள் பல இடம்பெறுவதற்கு மூலக்கரணியமாக இருந்தது.

தமிழ்ச்சொற்கள் பல மலாய் மொழியில் வேரியல் திரிபுற்றும் நேரடிக்கலப்பாகவும், வடமொழி வழிக்கலப்பாகவும் பரவியுள்ளன என்பதை ஆய்வின்வழிக் கண்டறியலாம்.

உயிர் திரிபு ~ அ > எ எனவும் ஐ > ஆய் எனவும் மாறும் முறையில் சொல்லின் முதலிலும் இறுதியிலும் மாற்றம் பெற்ற வகை. எ.கா: கடை (தமிழ்) கெடாய்– kedai ( மலாய் )

முதலிலும் இறுதியிலும் மெய் திரிபு முறை
எ. கா: கடை > kedai> gerai
இங்கு டகரம் ரகரமாக மாறும் இயல்பினையும் ஒப்பு நோக்கலாம். தமிழிலும்
கடி > கரி எனத் திரிதல் உண்டு.

முதலிலும் நடுவிலும் ஈற்றிலும் திரிதல் முறை
கழுதை > keldai இங்கு இடையில் ழ்>ல் என மாறி வழங்குகிறது.

ஈற்றில் டகரம் தகரமாக மாறல். எ. கா : மடி ( இறப்பு) > mati ( இங்கு ஈற்றுத் தகரம் வல்லொலி ஏற்றே ஒலிக்கும்) ஒலிப்பில் மத்தி எனக் கூறல் வேண்டும்.

இடைக்குறை ஏற்பட்டும் நெட்டித்தும் ஒலிக்கும் முறை. எ. கா: மட்டு > madu, இதனை மாடு என ஒலிக்க வேண்டும்.

இடைமிகுந்து ஒலிப்பது. எ. கா : முது (முதிர்ச்சி/ தரம்) >mutu இதனை முத்து என்றே ஒலித்தல் வேண்டும்.

தமிழிலிருந்து வடமொழிக்குச் சென்று அவ்வடமொழித் தாக்கத்தால் கலந்த சொற்கள். எ. கா:
அரசன் > இராசன் > இராச்சன்> raja
மா > மகு> மகா > மஹா> maha
திரு > ஸ்ரீ> செரி >s eri ( sri)

ஒரு சுருக்க ஆய்வுப் பார்வையாக மலாயின் kerja எனுஞ் சொல்லை இங்குக் காணலாம்.

மலாயில் kerja எனும் சொல்லின் மூலம் யாது?

Karja எனும் இந்தோனேசியச் சொல்லே kerja என மலாயில் மாறி இருக்கிறது.

தமிழில் செயலைக் குறிக்க வினை, செயல், பணி, கருமம் எனும் ஒன்றுக்கும் மேம்பட்ட சொற்கள் உள்ளன.

கருமம் செயவொருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல்.( 1021)

என்பார் வள்ளுவர். இக்குறளில் கருமம் எனுஞ் சொல் வினையைக் குறிப்பதாகும்.

உல் > குல் > கல்= கருமைப் பொருள் வேர்.
கல் > கால் > காய் > காய்ப்பு > காப்பு = கடுமையாக வேலை செய்ததால் கை கருத்து முரடு தட்டல்.

மண்வெட்டியைப் பிடித்து மண்வெட்டியதால் கையில் காப்புக் காய்த்து விட்டது என்பர்.

கல்>கருமம் = கையும் உடலும் கருக்குமளவு வினையாற்றல்.
கல்>கரு>கரணம் = வினை.
கரணம்>கரணியம் = வினைக்கான மூலம்
கல்>கர்>கார்>காரியம் = வினை
காரியம்>கார்ய ( வடமொழி )

கல்>கர்>கார்ய>கார்ஜ்ய ( இந்தோனேசிய மொழி)
கார்ஜ்ய>karjya

கார்ஜ்ய>கார்ஜா>>karja
Karya>karja>kerja. ( மலாய்)

தமிழிலிருந்து வடமொழிக்கும் வடமொழியிலிருந்து இந்தோனேசியமொழிக்கும் இந்தோனேசியமொழியிலிருந்து மலாய்மொழிக்கும் இச்சொல் சென்றுள்ளது என்பதைச் சொல்லொலிபடி முறைமாற்றங்களை அறிவதன் வாயிலாக நம்மால் உணரமுடிகின்றது.

மேலும் சொற்கள் சிலவற்றை முன்னோட்டமாய் இங்குக் காணலாம். இச்சொல் விளக்கப்பட்டியல் பிற்காலத்தில் விரிவாக ஆய்வுசெய்யப் பெற்று வழங்கப்படும்.

1. Terowong>உல்>துல்>துர்>துருவு >துருவல் = துளைத்தல்
Terowong = மலையைக் குடைந்து அமைக்கப்படும் குகை, குகைப்பாதை, சுரங்கம்
துருவல் கருத்தில் துல் வேரினால் விளைந்து மலாயில் மருவிய சொல்லே
தெரோவோங் terowong

2. குகை >>குவை>gua
உல்>குல்>குழை >குடை = குடைதல்
குழை>குகை >குவை>குவா~~ gua
உட்குடைந்து அமைந்துள்ள மலைக்குகை, சுரங்கம்

3. Muncul>தோன்றல், வெளிப்படல்
உல்>முல்>முசு>மூசு = முற்பட்டுத் தோன்றும் முகத்தை உடைய எலி
மூசு>மூஞ்சு = வெளிப்பட்டு நீண்டிருக்கும் முகம்.
மூஞ்சுறு = மூஞ்சு நீண்டு முற்பட்டு விளங்கும் எலி.

உல் எனும் வெளிப்பட்டுத் தோன்றி முற்படும் கருத்தமைந்த வேரினையே இந்த முஞ்சோல் muncul எனும் சொல்லும் கொண்டுள்ளது. இச்சொல்லின் அடியையும் வேரினையும் ஆராய்கையில் உல்>முல்>முன் எனும் வேரே வெளிப்படும்.

4. Unggul = முந்தித் தோன்றி முதன்மையாய், தலைமையாய் விளங்குவது. இதுவும் ஊ எனும் ஊகாரச்சுட்டிலிருந்து தோன்றியதே. தமிழில்
உங்கு > ஊங்கு எனின் முன்தோன்றி விளங்குவது என்றும் முன்னால் இருக்கும் இடம் என்றும் பொருளாகும். முதன்மை இடம் தலைமையாய், தனித்தன்மையதாய் விளங்கும். ஊங்கு>unggul
5. Mula>தொடக்கம். மூல முதன்மை. மூலம். உல்>முல் = முந்தித் தொடங்கல், தோன்றல் கருத்து வேர். உல்>முல்>முள்>முளை = தோன்றி வெளிக்கிளம்பும் விதைத்துளிர். முளை விடுதல். முல்>மூல்>மூலம் = முந்தித் தோன்றி முதன்மையாய், தொடக்கமாய் இருத்தல். தொடக்கமாய் இருப்பது அடிப்படையாய் இருத்தலால் தமிழில் மூலம் அடிப்படைக்கரணியப் பொருளைத் தந்தது. மலாயில் தொடக்கப் பொருளைத் தரும்.

6. Tengku >துங்கன் (குலோத்துங்கன்) துங்கன்>துங்கு>தெங்கு என மலாயில் வழங்குகின்றது. உல்>துல்>தும்>துங்கு>துங்கன்= முற்பட்டு விளங்கும் தலைவன். பிற்காலச்சோழர் இவ்வாறு அழைக்கப்பெற்றனர்.

7. Kecil >சிறியது. உல்>குல்>கில்>கிச்சு>கிச்சில்
8. Aduk>கலத்தல், அடு~ உல்= சேர்தல், கூடல் கருத்து வேர்;
உல்>அல்>அள்>அளை= கலப்பு, அள்>அளை>அளையம் = Aloy,
அள்>அடு = கலத்தல், சேர்தல் ( அடு>அடை = சேர்)
9. Paya>பள்ளம், நீர் ஏறியதாழ்வுப் பகுதி. பள்>பய்>பயம். >>பயம்>பயம்பு= பள்ளம்.
tanahpaya>பயம்பு நிலம்
10.Air >அயம் = நீர். ( அல்>அய்>அயம் = நீர் – பிங்கல நிகண்டு )
11.Adu>அடு>போர். அள்>அடு>அடுதல் = கலத்தலால் நிகழும் சண்டையிடுதல்
12.Abuh>அப்பு = வாயில் அப்புதல், விழுங்குதல், உல் = பொருந்துதல், ஒட்டுதல்

கருத்து. வாயில் உணவை அப்பிவிழுங்கல், திணித்தல். உல்>அல்>அம்>அம்மு>அப்பு
13.Ayah >ajah>அப்பா. ஐ = உயர்வு பொருள். வியப்பின் வழி ஆன உயர்வு. ஐ>ஐயா.
14.kakak>அக்கா. மூத்த உடன் பிறந்தாள். Kakak>kakஎனவும் சுருங்கும்.
அம்மை>அவ்வை>அக்கை>அக்கா.
15.Duta>தூதர், >>உல் = பொருந்தல், சேர்தல் கருத்து வேர். சேர்தலால் தொடர்பு உருவாகும்; தொடர்பினால் உறவுருவாகும். தொடர்புறவை உருவாக்குபவர். அரசின்செய்தியைமுறையறிந்துமாற்றரசிடம்சேர்ப்பிப்பவர்.உல்>துல்>துள்>துது>தூது
16.Adegan / adekan>காட்சி, திரைக்காட்சி, நாடகக்காட்சி>ஆடு>ஆட்டம், ஆடு>ஆடகம்.
17.Ahangkara>அகங்காரம் > அகம் கரித்தல், ( உல்>குல் = கூடுதல் கருத்து. குல்>கல்>கர்>கரி = மிகு, கரித்தல் = மிகுதல்)
18.Maha>மா = பெரிய. ( மா>பெரிய , உல்>முல்>மல் = திரட்சிப் பொருள், திரண்டது பருக்கும். உல்>முல்>முழு >முகு>மிகு, முகு>மகு>மகம்= பருமை, மகம்>மக>மா) மகு>மகா >மஹா.. ( வடமொழி)
19.Agih>அகை ... உல்= துளைத்தல் கருத்து வேர். உல்>அல்>அகு>அகை = கூறுபாடு. துளைத்தலால் பொருள்கள் சிதைந்து துண்டாகும். துண்டாகுவன பிரிதலால் பகு>பகிர்தல் பொருளில் மலாயில் சொல்லாக்கம் பெற்றது.
20.Kutuk>குத்திக் காட்டி இழித்தல். உல்>குல்>குத்து >குத்தல் . உடலைக் கூர்மையான ஊசியால் குத்துதல் போல் மனத்தைக் குத்தி கிழித்தல், பகடி செய்தல்.
21.Ketuk>கொட்டல். கையை மடக்கி தலையைக் கொட்டுதல். உல்>குள்>கொள்>கொட்டு.
22.Kutu >கூட்டு .உல் = சேர்தல் கருத்து வேர். உல்>கூள்>கூட்டு. பலரும் கூடி பணம் சேர்த்தல். கூட்டுப் பிடித்தல். Kutu>sekutu>ஒன்றித்த கூட்டு. Persekutuan >கூட்டியம், கூட்டரசு
23.Kelahi>கலகம். உல்= சேர்தல் கருத்து வேர். உல்>குல்>கல்>கலப்பு = கைகலப்பு. கல்>கலகம். கலகம் மலாயில் கெலாஹி எனத்திரிந்தது.
24.Tebuk>தெபுக். தமிழின் திரிபாகும். உல்>துள்>துளை. துள்>தள்>தம்>தமர்>துளை. தமரிகை = துளையிடு கருவி. தமர்>தவர்= துளை. தவர்தல்= துளைத்தல். துள்>தொள்>தொய்>தொவு>தவு>தமு>தமர். தொவு>தபு ===>தபு தல்=கெடுதல்=>துளைத்தலால்கெடுதல். தமு> தவு> தபு==> தெபு> tebuk = துளையிடல்.
25.Tepuk>தப்பல்= தட்டல். தப்பு>தொப்பு= தட்டு, அடி. தப்புவது ==>தட்டுவது. தப்பு= தப்பப்படுவது., தப்பளம்==>தபலா (இந்தி). தப்பு>தெப்பு>தெப்புக் tepuk.= தட்டல். தப்பு>tepuk
26.Madu>மட்டு, மது ( தேன்)
27.Mandi >மண்>மண்ணுதல் ( குளித்தல்) மண்ணி>மண்டி mandi
28.Bengkok>வளைவு. உல்>அல்>வள்>வங்கு>வெங்கு>பெங்கு>பெங்கோக் = வளைதல் , வளைவு
29.Terang>தெளிவு, உல்>துல்>தெல்>தெர்>தெருள்–>தெரள்>terang = தெளிவு. (வெளிச்சத்தாலும் விளக்கத்தாலும் தெளிவு ஏற்படல் )
30.Perahu>உல்>புல்>பள்>படு >படவு>படகு >>perahu (டகரம் ரகரமாக மாறல்)
31.Modal > முதல், உல்> முல்>முது>முதல் = வணிகத்தில் முதலாகச் செலவிடும் பணம்.
32.Mari >வா ,உள்>அள்>வள்>வர்>வரு>வருகை; வள்>வர்>வார்>வா. (வர்>மர்>மரி > Mari >>mai ( பேச்சு மொழி )
33.Kota >கோட்டை ( உல்>குல்>கோள் >கோடு >கோட்டை = உயர்வாயும் வளைவாயும் அமைக்கப் பெற்ற கட்டடம் )
34.Kerana > கரணியம் / காரணம் ( உல்>குல்>கல் >கரு >கரணம் > காரணம்)

வினைப்பாட்டிற்கான மூலம் எனப் பொருளமைந்தது.

35.Peluk>புல்லு = தழுவு ( உல் = சேர்தல் கருத்து வேர். உல்>புல் > புல்லுதல் = தழுவுதல் )

36.Buloh>மூங்கில், புல் எனும் தமிழ்ச்சொல் மூங்கிலைக் குறிக்கும். புல் >பூலோ என மலாயில் திரியும்

37.Keruh>கலங்கல், நீர் தெளிவில்லாமல் கலங்கியிருத்தல். கல்= கருமை கருத்து வேர். கல்>கரு , கரு >கெரோ என மலாயில் திரிந்துள்ளது.

38.Teliti>தெளிவு ,உல்>துல் = பிளத்தல், ஒளியால் இருள் பிளந்து விலகலால் ஏற்படும் தெளிவு. தெளி >தெளித்தி

39.Gemuk>கும்மு = தடியன். உல்>திரட்சி கருத்து வேர். உல்>குல்>கும்>கும்மு >>கெம்முக்

40.Terang>தெருள், தெளிவு, தெருட்டல், தெருள்>தெரல்>>தெராங் (மலாய்)

41.Badai>வாடைக்காற்று, வாடை, வடக்கிலிருந்து வீசும் காற்று, வகரம் பகரமாக மாறும் முறையில் வாடை > பாடாய் எனத் திரிந்துள்ளது.

42.Bagai>வகை, வகரம் பகரமாகும் திரிதல் முறையில் வகை >பகாய் எனத் திரிந்துள்ளது.

43.Adun>Adon ,ஆடை, ஆடை >ஆடோன் ஆகி பின்னர் ஆடுன் எனத் திரிந்துள்ளது. ஆடு>ஆடை. காற்றில் அசைவதால் ஆடையாயிற்று

44.Akar>வேர், அள்>பக்கம், அள்கு>அக்கு>அக்கம், அக்குவேர் = பக்கவேர், அக்குவேர்>அக்கார் ( மலாய் )

45.Malam >இரவு, மாலை உல்= கருமைப் பொருள் வேர். உல்>மல்>மால் = கருமை, மால்>மாலை = கருக்கும் இரவை நெருங்கும் நேரம். மாலை >malam மாலாம் எனத் திரிந்துள்ளது.

46.Tunggal >தனித்து, துங்கு= முற்பட்டு விளங்கும் தலைமை. முற்பட்டு தனித்துக் காணப்படுவது, ஒற்றையாய்த் தனித்து விளங்குவதை இவ்வாறு மலாயில் குறிப்பிடுவர். இதற்குத் தமிழின் உல்>துல்>துங்கு எனும் வேரும் அடியும் மூலமாகலாம். Tunggu> Tunggal. துங்கால்

47.Tinggal>தனித்திருப்பது விடுபட்டதாகவும் விளங்கும், எஞ்சியிருப்பதாகவும் இருத்தல் பொருளிலும் வழங்கும். இச்சொல்லுக்கு, இருத்தல், விடுபடல், எஞ்சல் என் மலாயில் பொருள். தமிழின் தங்கல் இருத்தல் எனவும் எஞ்சல் எனவும் பொருள் தந்து இச்சொல்லோடு ஒத்துப்போவதைக் காணலாம். தங்கல்> tinggal திங்கால்

48.Tolak>தள்ளு ,உல்>துள்>தள்> தள்ளு , மலாயில்தள்>தொள்>தோளாக் என மருவியிருக்கிறது.

49.Belah>பிளவு, உல்> துளைத்தல் கருத்து வேர். உல்> புல்> பிள் > பிள > பிளவு. பிள > பிளப்பு. பிள>belahஎன மலாயில் மருவியிருக்கின்றது.

50.Gelab>இருட்டு. உல்>குல்> கல் = கருமை கருத்து வேர். கல்> கலி = கருமை, கல்>கர்> கருக்கல் = இருட்டு. கல் >gelap கெலாப் என மருவிருக்கின்றது.

இது போலும் சொற்கள் பலவற்றை இந்தோனேசிய மலாய் மொழிகளில் பரவலாகக் காணலாம். ஆய்வினைப் பிற்காலத்தில் மேலும் விரிவு செய்வதன் வாயிலாக மலாய் – தமிழுக்கிடையிலான தொடர்பு மேலும் தெளிவுபடுத்தப்பட்டு, தமிழிலிருந்து மலாய்மொழிக்குச் சென்ற ஏனைய சொற்களையும் பட்டியலிட்டுக் காட்டவியலும்.

# தமிழ்நாட்டு நாள்காட்டியில் அறுபது ஆண்டுச் சுழற்சிமுறை

முனைவர் மா. பூங்குன்றன்
பதிப்பாசிரியர், அகரமுதலி இயக்ககம்

தமிழ்நாட்டு நாள்காட்டிகளில் தமிழ் ஆண்டுகள் என்ற பெயரில் 'அறுபது ஆண்டுத் தொகுதி' நெடுங்காலமாகப் பயன்பாட்டில் உள்ளது. அந்த ஆண்டுகளின் பெயர்கள் ஒன்றுகூட தமிழ்மொழியில் இல்லை. மாறாக அவை அனைத்தும் சமற்கிருதப் பெயர்களே. எனவே அதன் தோற்றத்தை ஆராய வேண்டிய தேவை ஏற்பட்டது.

இது சாலிவாகனன் காலத்தில் உருவாக்கப்பட்டது என்றும் கூறுவர். ஆனால் இது தென்னாட்டில், குறிப்பாகத் தமிழ்நாட்டில் மட்டுமே அதிகப் புழக்கத்தில் உள்ளது.

60 ஆண்டுகள் எப்படி உருவாகின என்பதற்கு ஒரு புனைகதை முன்வைக்கப்படுகிறது அந்தக் கதையின் சுருக்கம் இது. ஒரு முறை நாரத முனிவர் காமவேட்கையால் தாக்கப்பட்டார். கண்ணனிடம் போய் அவருடைய 60 ஆயிரம் காதலிகளில் ஒருவரையாவது தனக்குத் தரக் கூடாதா என்று வேண்டியுள்ளார். "என்னைத் தன் மனத்தில் வைக்காத ஏதேனும் ஒரு பெண்ணை எடுத்துக் கொள்ளுங்கள்" என்றார் அவர். அப்படிப்பட்ட பெண்ணைத் தேடி அலைந்தும் நாரதரால் காண முடியவில்லை. அதனால் நாரதர் கண்ணனிடமே வந்து "நானும் ஒரு பெண்ணாகி உங்களோடு இருந்துவிடுகிறேன்" எனச் சொல்ல, கண்ணன் நாரதரை ஒரு பெண்ணாக மாற்றி, அவருடன் 60 ஆண்டு வாழ்ந்து 60 மகன்களைப் பெற்றார். அம்மக்கள் ஒவ்வொருவரின் பெயரிலும் ஒவ்வோர் ஆண்டு பெயர் பெற்றுள்ளது என்றவாறு அந்தக் கதை செல்கிறது. இது மற்ற தொன்ம(புராண)க் கதைகள் போல நம்பக் கூடியதாகவும் இல்லை. மாறாக அருவருப்பான கதையாகவும் உள்ளது.

## தமிழில் மட்டுமா 60

இந்தக் கதை ஒரு புறம் இருக்கட்டும். 60 ஆண்டுகள் வந்ததற்கு வரலாற்றுப் பின்புலமும் உண்டு. 60 ஆண்டுகள் நாள்காட்டி முறை என்பது காலத்தைப்பற்றிய மாந்த அறிவின் படிநிலை வளர்ச்சிப் பாதையில் ஒரு கட்டமே. உலகின் பல நாள்காட்டிகளில் அது வெளிப்பட்டுள்ளது. இந்தியாவில் தமிழ் உள்ளிட்ட பல மொழிகளின் நாள்காட்டிகளிலும் வெளிப்பட்டுள்ளது. ஐந்திரம் என்று சொல்லப்படுகின்ற பஞ்சாங்கமும் நாள்காட்டியும் போலத்தான், அவையும் 60 ஆண்டுகள் சுழற்சிமுறையைப் பயன்படுத்தியுள்ளன

## உலக அளவில் 60

இன்றைய ஈராக்கு எனப்படுகிற நாட்டின் தென்பகுதியில் வாழ்ந்த சுமேரிய மக்களும் 60 ஆண்டுகளைப் பயன்படுத்தியுள்ளனர். அவர்களின் மாதங்களில் கிழமை(வாரங்)களே கிடையாது. ஒரு நாளுக்கு 12 மணிநேரம் என்ற கணக்கு அவர்களிடம் இருந்தது, அமெரிக்கக் கண்டத்தில் வாழ்ந்த மாயன் நாகரிக மக்கள் ஒரே நேரத்தில் இரண்டு நாள்காட்டிகளைக் கையாண்டுள்ளனர். தூயதான சடங்குகளுக்காக மட்டுமே 260 நாள்கள் கொண்ட ஒரு நாள்காட்டியும், மற்ற செய்திகளுக்காக 365 நாட்கள் கொண்ட ஒரு நாள்காட்டியும் வைத்துள்ளனர். அதில் 20 நாட்கள் கொண்ட 18 மாதங்கள் இருந்துள்ளன. மாயன் மக்களின் வாழ்வில் இந்த இரண்டு நாள்காட்டிகளும் ஒன்றின் மீது இன்னொன்று கலந்து பயன்பாட்டில்

இருந்தன எனத் தரவல்கள் உள்ளன, சீனத்திலும் இந்த 60 ஆண்டுச் சுழற்சி முறை இன்னமும் புழக்கத்தில் உள்ளது.

## இந்திய நாள்காட்டி

இந்தியத் துணைக்கண்டத்தில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாகவே, சூரியனை அடிப்படையாகக் கொண்டு 360 நாட்களும் 12 மாதங்களோடும் ஒரு நாள்காட்டியும் கண்ணனை நடுவாக வைத்து ஒரு நாள்காட்டியும் இருந்துள்ளதாகத் தரவல்கள் உள்ளன. அதன்படி ஆங்கில ஆண்டு 2022 என்பது கண்ணன் ஆண்டு 5124 ஆக உள்ளது என்பர்.

## தமிழ் நாள்காட்டி

பழந்தமிழர் காலத்தைப் பெரும்பொழுது, சிறுபொழுது என இரண்டாகப் பிரித்தனர். ஓர் ஆண்டை இளவேனில்(மேழம், விடை), முதுவேனில் (ஆடவை, கடகம்), கார் (மடங்கல்,கன்னி), கூதிர் (துலை,நளி), முன்பனி (சிலை, சுறவம்), பின்பனி (கும்பம்,மீனம்) என்று ஆறாகப் பிரிப்பதுதான் பெரும் பொழுது.

ஒரு நாளை வைகறை, காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம் என்று ஆறாகப் பிரிப்பதுதான் சிறுபொழுது.

ஒரு நாள் 60 நாழிகை கொண்டது என்றும் கணக்கிட்டனர். ஒரு நாழிகைக்கு 24 நிமையங்கள். இன்றைய 24 மணிநேரம் கொண்ட ஒருநாள் இந்தக் கணக்குக்குச் சரியாகப் பொருந்துகிறது.

தமிழில் நாள்களுக்கு ஞாயிறு என்று சூரியனின் பெயரும், திங்கள் என்ற நிலவின் பெயரும், கோள்களின் பெயர்களும் வைக்கப்பட்டுள்ளன.

விண்மீன்களை முன்வைத்தும் உலக உருண்டையின் சுழற்சியை அடிப்படையாக வைத்தும் தமிழ் நாள்காட்டி உருவாக்கப்பட்டதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர்,

ஏப்ரல் 14 அன்று புத்தாண்டு தொடங்குவது என்பது தமிழ்நாட்டில் மட்டும் அல்ல. அசாம், வங்காளம், கேரளம் பஞ்சாப் உள்ளிட்ட பல மாநிலங்களிலும் ஏப்ரல் 14தான் புத்தாண்டு.

இந்தியாவுக்கு வெளியிலும் பர்மா, கம்போடியா, லாவோசு, நேபாளம், தாய்லாந்து உள்ளிட்ட நாடுகளிலும் இந்த நாள்தான் புத்தாண்டு.

'சூரிய சித்தாந்தம்' எனப்படுகிற பழைய சமற்கிருத வானசாத்திர நூலில் விண்மீன்களின் சுற்றுப்பாதையின் காலமாக 60 ஆண்டுகள் கணிக்கப்பட்டுள்ளன.

இதற்கிடையில் 1885இல் வந்த சி.டி. மெக்ளின் என்ற ஆங்கில அதிகாரி ஒருவர் சென்னை மாகாணப் பெருங்கையேடு ஒன்றைத் திரட்டினார். அதில் ஆரியர் வருகைக்குமுன் தென்னாட்டு மக்களைப் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அதில் பன்னிரண்டாண்டு, அறுபானாண்டு பற்றிய குறிப்புகள் உள்ளன.

## மெக்ளின் குறிப்பு

"தமிழ்நாட்டு மீனவர் தங்கள் பணிநடைமுறையில் திங்கள் கலையைக் கொண்டு காலத்தைக் கணக்கிடும் பழைமையான காலக் கணக்கீட்டு முறையினை உருவாக்கினர். சமதளப் பகுதி உழவர் பருவங்களையும் ஞாயிற்றின் இயக்கத்தினையும் உற்றுநோக்கி வந்தனர். தமிழரின் வானவியல் முதலில் திங்களைக் கொண்டு கணக்கிடும் முறையாக இருந்தது. பின்னர் முழுமையாக ஞாயிறு – நாண்மீன் சார்ந்ததாக இருந்தது. பார்ப்பனர் செல்வாக்கு ஏற்படுவதற்குமுன் தமிழர்கள் நன்கு வளர்ந்த நடைமுறை வானவியலைக் கொண்டிருந்தனர் என்பதை இவர்கள் மொழியிலுள்ள சொல்லாட்சிகளும் குமுகாய அமைப்புகளும் காட்டுகின்றன. இவர்கள் உருவாக்கிய இந்த அமைப்பு இன்னும் பலவகைகளில் தன் நிலைப்புத் தன்மையைக் கொண்டுள்ளது. தமிழர் காலவரிசையை நிரல்படுத்தும் ஐந்து வியாழவட்டம் அல்லது அறுபது ஆண்டு, ஆரியமுறையைச் சிறிதும் சார்ந்தது

அன்று. தமிழர்களிடையே குடும்ப நிகழ்வுகளில் கொள்ளும் பன்னிரண்டு ஆண்டுக் காலத்தைக் கணக்கிடும் பழக்கம் இந்த அடிப்படையிலேயே உருவானது. இது பிற ஆரிய அமைப்பு எதையும் சாராது இந்த மண்ணில் உருவானதே." என்பதே அக்குறிப்பு.

பொதுவாகவே தமிழர் வாழ்முறையில் அவர்களின் தொழிலுக்கும் வானியலுக்கும் நிரம்பத் தொடர்பு உண்டு. அவர்கள் வானியலை நுட்பமாக நோக்கினர். அதன்வழி பருவ மாற்றங்களைக் கண்டறிந்தனர். தங்களின் தொழில்களான வேளாண்மை, கால்நடை வளர்ப்பு, கடற்செலவு என அனைத்துத் தொழில்களுக்கும் வானியல் அறிவைப் பயன்படுத்திக் கொண்டனர். வானில் காணப்படும் கோள்கள், விண்மீன்கள் போன்றவற்றின் சுழற்சி இயக்க மாற்றங்களுக்கேற்பப் பருவ மாற்றங்களும் ஏற்படுகின்றன என்பதைப் பட்டறிவு வாயிலாக நம்பினர். அத்தோடு தங்கள் உடல் மாற்றங்கள், தாங்கள் வளர்க்கும் கால்நடைகளின் வளர்ச்சி மாற்றங்கள் மற்றும் நிலைத்திணைகளின் பூக்கும் காய்க்கும் பருவம் மாற்றங்கள் இவற்றை இணைத்துக் கூர்ந்து கவனித்தே தங்கள் வாழும் முறையை அமைத்துக் கொண்டவர்கள் தமிழ் மக்கள்.

அந்த வகையில், மாந்த இனத்தில் பெண்களின் உடலில் மாதமொருமுறை ஏற்படும் மாதவிலக்குக்கும் நிலவின் காருவா, வெள்ளுவா (அமாவாசை, பவுர்ணமி) இயக்கத்திற்கும் ஈர்ப்புக்கும் தொடர்புபடுத்திக் கொண்டனர்.

ஆண்டுக்கொருமுறை பூத்துக் காய்க்கும் மரங்கள் பலவற்றிற்கும் கதிரவனின் ஆண்டுக்கொருமுறை நடக்கும் தென்செலவு வடசெலவு இயக்கத்திற்கும் தொடர்புபடுத்திக் கொண்டனர்.

எந்த ஒரு இயற்கை மாற்றத்திற்கும் வானியல் கோள் விண்மீன் சுழற்சி இயக்கத்திற்கும் ஈர்ப்புக்கும் தொடர்புபடுத்திக் கொண்டு, இயற்கையிலிருந்து நிரம்பக் கற்றுக் கொண்டனர். இயற்கை வாழ்வு வாழ்ந்தனர்.



வியாழனின் ஒரு சுற்று 11.87 ஆண்டுகள்

காரியின் ஒரு சுற்று 29.46 ஆண்டுகள்

இப்படங்கள் சூரிய குடும்பத்தில் உள்ள நிலவுலகம் (பூவுலகம்), வியாழன், காரி ஆகிய 3 கோள்களின் இயக்கங்களை மட்டும் காட்டுகின்றன.

முதல் படத்தில் நிலவுலகிற்கு மேல் ஒரே நேர்க்கோட்டில் வியாழனும் காரியும் வந்து நிற்கும் நிலை. இது ஓராண்டில் நிகழ்ந்ததாகக் கொள்வோம். எடுத்துக்காட்டாக, 2001இல் நமக்கு நேர்கோட்டில் வியாழனும் காரியும் வந்ததாகக் கொள்வோம்

இரண்டாவது படம் அதற்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு 2012இல் நிகழ்வது. இதில் நிலவுலகம் பன்னிரண்டு சுற்று சுற்றி அந்த இடத்தில் நிற்கும்போது, வியாழன் ஒரு சுற்று சுற்றி அதே இடத்தில் நிற்கிறது. வியாழனின் ஈர்ப்பால் சில மரஞ்செடி கொடிகளுக்குப் பருவகாலம் ஏற்பட்டு 12 ஆண்டுகளுக்குப் பிறகு ஒருமுறைப் பூக்கிறது. அந்த நேரத்தில் காரி தன் சுற்றுவட்டத்தில் ஐந்தில் ஒரு பகுதியே நகர்ந்திருக்கும்.

மூன்றாம் படம் அதற்கடுத்த 12 ஆண்டுகளுக்குப் பின் 2024 நிகழ்வதாக இருக்கும். இப்போது இதேபோல் நிலவுலகம் 12 சுற்றும், வியாழன் ஒரு சுற்றும், காரி தன் சுற்றுவட்டத்தில் ஐந்தில் இரண்டு பகுதிகளைக் கடந்தும் இருக்கும்.

நான்காவது படம் 2036 இல் நடக்கக் கூடியதாக இருக்கும். இப்பொழுது காரி தன் சுற்றுவட்டத்தில் மூன்று பகுதிகளைக் கடந்திருக்கும்.

ஐந்தாவது படம் காரி தன் சுற்று வட்டத்தில் நான்கு பகுதி கடந்திருக்கும்.

ஆறாவது படம் முதல் நிலையை ஒத்து காரி தன் சுற்றுவட்டத்தில் 5 பகுதியையும் கடந்து முடித்து தம் முழு சுற்று நிறைவு செய்து இருக்கும். இந்த நேரத்தில் வியாழன் ஐந்து சுற்று சுற்றியிருக்கும். நிலவுலகம் 60 சுற்றுகள் சுற்றியிருக்கும். வியாழன் காரி இரண்டும் ஒரே நேர்கோட்டில் இருப்பதால் அவற்றின் ஒட்டுமொத்த ஈர்ப்பினால் சில மரஞ்செடி கொடிகள் பருவம் அடைந்திருக்கலாம். மூங்கில் பூக்கள் பூத்து பருவம் எய்தும்.

சூரிய மண்டிலத்தில் இருக்கும் பெரிய கோள்களான வியாழன், காரி(சனி) என இரண்டின் இயக்கங்களையும் தொடர்ந்து கவனித்தனர். வியாழன் கதிரவனைச் சுற்றிவர 12 ஆண்டுகள் ஆவதைக் கவனித்தனர். 12ஆண்டுகளுக்கு ஒருமுறை உலகில் நடக்கும் மாற்றங்களையெல்லாம் தொடர்புபடுத்திப் பார்த்தனர். அந்தவகையில் வியாழன் சுற்றிவரும் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை குறிஞ்சி மலர்வதைக் காண்கிறோம். உயரமான மலைகளெல்லாம் குறிஞ்சி மலர் படர்ந்து பூத்துக் குலுங்குவதைக் காணலாம். 12ஆண்டுகளுக்கு ஒருமுறை நிலவுலகை நெருங்கும்போது அதன் ஈர்ப்பு விசையால் இந்த மாற்றம் ஏற்பட்டிருக்கலாம் என்பது அவர்களின் ஒரு கருதுகோள்(hypothesis). இதேபோல் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை காய்க்கக்கூடிய நெல்லிக்கனியை அதியமான் அவ்வைப் பாட்டிக்குக் கொடுத்ததாக ஒரு பதிவும் உண்டு .



காரிக்கோள் கதிரவனைச் சுற்றிவர 30 ஆண்டுகள் ஆகின்றன. முப்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை உலகில்



நடக்கும் மாற்றங்களை உற்றுநோக்கினர். வியாழன் ஐந்துமுறை சுற்றி வந்து ஒரு புள்ளியில் நிற்பதற்கும் காரி இரண்டு முறை சுற்றிவந்து, அதற்கு நேர்கோட்டில் நிற்பதற்கும் 60 ஆண்டுகள் ஆகின்றன. அறுபது ஆண்டுகளுக்கு ஒருமுறை நிலவுலகிற்கு அருகில் இரண்டும் ஒரே நேர்கோட்டில் சந்திக்கின்றன.

பல நிலைத்திணைகள் பன்னிரண்டு ஆண்டுக்கான நுட்பத்தில் இயங்குகின்றன எனத் தெரிகிறது. மாந்த இனத்திலும் பெண்களின் பருவமாகும் காலமாகத் தமிழிலக்கியம் குறிப்பிடும் மங்கைப் பருவம் 12 ஆண்டு எனக் குறிக்கின்றனர்.



பொ பா து வா க நிலைத்திணையியலிலும் (Botony) விலங்கியலிலும் (Zoology) வளர்ச்சிகளைத் தழைப்பு வளர்ச்சி (Vegitative growth) இனப்பெருக்க வளர்ச்சி (Reproductive growth) என இருவகைகளாகப் பிரிப்பர். பெண் பருவக் காலமும், நிலைத்திணைகள் சில பூக்கும் காலமும் 12 ஆண்டுகள் எனத் தெரிகிறது.

இந்தப் பன்னிரண்டு ஆண்டுக் காலம் ஆரியர்கள் வருகைக்கு முன்பே தமிழர்களின் வாழ்க்கை நடைமுறையில் கடலோர நெய்தல் மக்களிடமும் கால்நடை வளர்ப்போரான குறிஞ்சி, முல்லை நில மக்களிடமும் இருந்திருப்பதாக வரலாற்று ஆய்வாளர்கள் (மெக்ளின் போன்றோர்) குறிப்பிடுகிறார்கள். மேலும் அவர்களே 5 முறை பன்னிரண்டு சுழற்சி முறையில் 60 ஆண்டு முறையையும் பயன்படுத்தியிருப்பதாகக் கூறுவர்.

அறுபது ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் தாவரம் எதையாவது அவர்கள் வாழ்முறையில் பதிவு செய்துள்ளனரா அல்லது அப்படி ஒன்று இருக்கிறதா என்பதைத் தெரிந்துகொள்ள வேளாண்சார் ஆராய்ச்சியாளர்களை அணுகினோம்,

அவர்கள் கூறிய விடை வியப்பாக இருந்தது. மூங்கிலில் பல வகைகள் அறுபது ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கக் கூடியன என்று அவர்கள் கூறினர். பூப்பதோடு அவற்றின் வாழ்நாள்காலம் முடிந்துவிடும்; வாழை குலை தள்ளியவுடன் அதன் வாழ்காலம் முடிவது போல் என்றும் அவர்கள் கூறினர்.

அறுபது ஆண்டுகளுக்கு ஒரு முறை பருவம் கொண்டு பூக்கும் மூங்கிலையும் அவர்கள் கட்டாயம் கண்டிருக்க வேண்டும். அதற்கும் அந்தக் கோள்களின் இயக்கத்திற்கும் தொடர்புபடுத்திக் கண்டறிந்ததன்வழித் தோன்றியதே அறுபது ஆண்டுச் சுழற்சி முறை.

இதற்குப் பின்தான் ஆரியர்கள் வருகை நேர்ந்திருக்கவேண்டும். 60 ஆண்டுகளுக்குரிய பெயர்களைச் சமற்கிருதமாக மாற்றியவர்கள் ஆரியர்களே. தமிழ்நாட்டில் இருக்கும் ஆயிரக்கணக்கான அழகிய ஊர்ப்பெயர்களையும் திருத்தளங்கள் மற்றும் அவற்றின் மூலவர் பெயர்களையும் மாற்றித் திரிபு செய்த பெருமை ஆரியர்களையே சாரும். ஆரியர் வருகைக்கு முன்பே அறுபது ஆண்டுக் கொள்கையைத் தோற்றுவித்த பெருமை முழுவதும் தமிழர்களையே சாரும் என்று உறுதியாகக் கூறலாம்.

வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று

புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்

திருப்பாவை–13

# தொல்காப்பியம் வகுக்கும் அகராதியியல் கோட்பாடு

முனைவர், **ஆ.கமலா**
தமிழ்த்துறை, உதவிப்பேராசிரியர்,
செங்கமலத் தாயார் கல்வி அறக்கட்டளை
மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சுந்தரக்கோட்டை
மன்னார்குடி



### அகராதி விளக்கம்

அகரமுதலி அல்லது அகராதி என்பது ஒரு மொழியில் உள்ள சொற்களை அகரவரிசைப்படி தொகுத்து அவற்றுக்கான பொருளைத் தரும் நூல் சில சமயங்களில் அச்சொற்கள் தொடர்பான வேறுபல விவரங்களையும் இது உள்ளடக்கி இருக்கும். அகராதி என்ற சொல் அகரம், ஆதி என்ற இரண்டும் சொற்களில் சேர்க்கையாலானது (அகரம்+ஆதி=அகராதி), இந்த நூலிலே சொற்கள் அகரவரிசையில் அமைக்கப்பட்டிருக்கும் ஒரே சொல்லில் தொடங்கும் சொற்கள், அவற்றில் இரண்டாவது எழுத்தைக் கொண்டு அகர வரிசைப்படுத்தப்படும். இவ்வாறே சொல்லின் இறுதி எழுத்துவரை அகரவரிசை பின்பற்றப்படும்.

ஒரு மொழியிலுள்ள சொற்கள் அனைத்தையும் அகரமுதலிய எழுத்துவரிசையில் அமையும்படி ஒரு சேரத் தொகுத்து,அவற்றின் பொருள்களை அம்மொழியாலேனும் பிறமொழியாலேனும் விளக்கும் நூல் அகராதி எனப்படும். அகராதி என்னும் சொல்லின் 'ஆதி' என்னும் சொல் வடமொழி என்பதால் மொழி ஞாயிறு பாவாணர் அகரமுதலி என்று அழைத்தார். சொல்லின் பொருளைத் தவிர, அதன் தோற்றம் ஆட்சி, அது வந்துள்ள இடம் முதலியவற்றையும் பெரிய அகராதிகளில் காணலாம். இவ்வாறு பொதுப்பட அமைந்துள்ள சொல்லகராதியேயன்றி ஏதேனும் ஒரு பொருட்டு அல்லது ஒரு தொழிற்குரிய சொற்கள் சொற்களின் தோற்றம் ஒரு நாட்டின் பலபகுதிகளிலும் வழங்கும். மொழிபேதங்கள் இவற்றைப் பற்றி தனித்தனி அகராதிகள் தோன்றுதலும் உண்டு. அன்றியும் ஏதேனும் ஒரு நூலில் வந்துள்ள முக்கியமான சொற்களைத் தேர்ந்தெடுத்து அவற்றை அகராதி முறையில் அமைத்து அவை வந்துள்ள இடங்களையும் சுட்டி அந்நூலின் பிற்சேர்க்கையாகவேனும், தனிப்படவேனும் வெளிப்படுதலும் உண்டு. இவ்வகை முறையில் அமைந்துள்ளதற்கு அருஞ்சொல் அகராதி என்று பெயர்.

இங்ஙனமின்றி, ஒரு நூலிலுள்ள முக்கிய சொற்களை அல்லது பொருட்கூறுகளைத் தொகுத்து அவற்றை அகர வரிசைப்படுத்தி, அவற்றின் கீழ், அவை பயின்றுள்ள தொடர்களையும், இடங்களையும் தருவது பிறிதொருவகை அகராதி. இதனை ஆங்கிலத்தில் கங்கார்டன்ஸ் என்பர். சொற்களைப் பற்றியது சொற்கோவை அகராதி எனவும், பொருட் கூறுகளைப் பற்றியது பொருட்கோவை அகராதி எனவும் கூறத்தகும். திருக்குறள் முதலிய தலை சிறந்த நூல்களுக்கு இவ்வகை அகராதிகள் இயற்ற பெரும்பயன் அளிக்கவல்லது, மேற்குறித்த அகராதி வகைகளேயன்றி கலை முதலிய அறிவுத்துறைகள் பற்றிய சொற்களை முறைப்படுத்தி அருஞ்சொற்களை விளக்குவதும் ஒரு வகை அகராதியாகும்.

### தொல்காப்பியம்

தொல்காப்பியம் என்பது இன்று கிடைக்கப்பெறும் மிகப்பழைய தமிழ் இலக்கண நூலாகும். இது இலக்கிய வடிவிலிருக்கும் ஓர் இலக்கணநூலாகும். இதை எழுதியவர் பெயர் தொல்காப்பியர் என்று தொல்காப்பியப் பாயிரம்

குறிப்பிடுகிறது. தொல்காப்பியத்தில் இடைச்செருகல்கள் உள்ளதாக அறிஞர்கள் கருதுகின்றனர். பழங்காலத்து நூலாக இருப்பினும், இன்று வரை தமிழ் இலக்கண விதிகளுக்கு அடிப்படையான நூல் இதுவே ஆகும்.

## தொல்காப்பிய உரியியல் தரும் செய்திகள்.

உரியியலில் இடம் பெற்ற 100 நூற்பாக்களில் முதல் இரண்டு நூற்பாக்களிலும், இறுதி எட்டு நூற்பாக்களிலும் உரிச்சொல்லின் இலக்கணத்தை அவை உணர்த்தும் பொருளை விளக்க வேண்டிய முறைகள் குறித்த செய்திகளையும் விளக்கிவிட்டு எஞ்சிய 90 நூற்பாக்களில் தான் தேர்ந்தெடுத்த உரிச்சொற்களுக்குரிய பொருள்களைத் தொகுத்துள்ளார். தொல்காப்பியரின் உரியியல் வழியாக இரண்டு செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன.

1.உரியியலில் தொல்காப்பியரால் எத்தகைய சொற்கள் பொருள் விளக்கம் செய்யத் தேர்வு செய்யப்பட்டுள்ளன?

2.அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட சொற்கள் எவ்வாறு பொருள் விளக்கம் பெற்றுள்ளன?

இவை குறித்து முதலில் தெரிந்து கொள்வது அடிப்படையானது.

## பொருள் விளக்கம் பெறத் தேர்வான சொற்கள்

உரியியலானது பொருள் உணர்ந்து கொள்வதற்குக் கடினமாக இருக்கும் சொற்கள் எனக் கருதப்பட்ட சொற்களுக்கு மட்டுமே பொருள் விளக்கம் தருகிறது. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா வெளிப்பட வாரா வுரிச்சொன்மேன (சொல்–299)

என்ற உரியியல் நூற்பா இதனை உறுதி செய்கிறது. பொருள் உணர்ந்து கொள்வதற்குக் கடினமாக இருக்கும். சொற்கள் என்ற கருத்தில்தொல்காப்பியரால் உரியியலில் தொகுக்கப்பட்ட சொற்களை இன்றைய நோக்கிலிருந்து பின்வருமாறு பகுத்துக்காட்ட முடியும்.

1. 'துவன்று' 'முரஞ்சல்' போன்ற சொற்கள் (சொல்லும் பொருளும் தெரியாதவை)
2. மாதர் (=காதல்) போன்ற சொற்கள் (மாதர் தெரிந்த சொல், காதல் – அரிய பொருள்)
3. தட, கய, நளி = (பெருமை) என்பன போன்ற சொற்கள் (ஒரு பொருள் தரும் பல சொற்கள்)
4. கடி (=வரைவு , கூர்மை, காப்பு, புதுமை, விரைவு, விளக்கம், மிகுதி……)

என்பன போன்ற சொற்கள் (பல பொருள்தரும் ஒரு சொற்கள்).

இவை போன்று நான்கு நிலைகளில் இருக்கும் 120 சொற்கள் உரியியலில் இடம்பெற்றுப் பொருள் விளக்கம் பெற்றுள்ளன.

## உரியியலின் பொருள் விளக்க முறைகள்

பொருளை விளக்கும் முறைகளாக உரியியலின் வரி கூறக்கூடியவை சில உண்டு.

"பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தித்" (சொல் 298:6) வழக்கில் இல்லாத சொற்களுக்குரிய பொருளை வழக்கிலுள்ள சொற்களைக் கொண்டு விளக்குதல் "முன்னும் பின்னும் வருபவை நாடி……"

(சொல் 389 – 2)

பொருள் விளக்கம் செய்யப்பெற வேண்டிய சொற்களின் முன்னும் பின்னும் வரும் சொற்களையும் ஆராய்ந்து பொருள் விளக்கம் செய்தல்,

ஒத்த மொழியாற் புணர்த்தன

ருணர்த்தல்……. (சொல் 389–3)

பொருள் விளக்கம் செய்யும்போது ஒத்த மொழியால் விளக்குதல்,

ஆகிய இவையே உரிச்சொற்களின் பொருளை விளக்கும்போது கவனத்தில் கொள்ள வேண்டிய, வையாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

## ஒத்த சொல்லைத் தந்து பொருள் விளக்குதல்

"ஒத்த மொழியான் புணர்த்தன ருணர்த்தல்......" என்பதற்கு இணங்க உரிச்சொற்களை விளக்கும்போது ஒத்த சொற்களைத் தந்து விளக்குதல் என்பதே உரியியலில் மிகுதியாகக் காணப்படுகிறது.

அரியே ஐம்மை (சொல்–356)
வாளொளி யாகும் (சொல்–367)
அமர்தல் மேவல் (சொல்–380)

என்பன போற்றவை இம்முறையில் அமைந்தவற்றிற்குரிய சில எடுத்துக்காட்டுகள் உரியியல் அல்லாத பிற இயல்களிலும் இம்முறை காணப்படுகிறது.

"அகவ லென்ப தாசிரி யம்மே" (பொருள் –394) என்ற நூற்பா மேற்சொன்னதற்கு ஓர் எடுத்துக்காட்டு பொருள் விளக்கும் போது ஒத்தமொழியால் விளக்க வேண்டும் என்று மட்டுமே தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இருப்பினும், தொல்காப்பிய உரியியல் நூற்பாக்களைக் கவனிக்கும் போது வேறு முறையிலும் தொல்காப்பியர் பொருள் தந்திருப்பது தெரிகிறது. வேறு முறையில் பொருள் தந்ததாகப் பின்வரும் இரண்டைக் காட்டலாம்.

## அடைதந்து விளக்குதல்

பொருள் விளக்கம் செய்கையில் ஒத்தசொல்லோடு அடை தந்து விளக்குதல் என்ற நிலையும் உரியியலில் காணப்படுகிறது. அந்த அடை பொருளோடு தொடர்புடையது. "சீர்த்தி மிகுபுகழ் " (சொல்–312), சீர்த்தி என்பது வெறும் "புகழ்" மிகு அன்று (பெரும்) புகழ் (குறிப்பு– சென்னைப் பல்கலைக் கழக அகராதியும் சீர்த்திக்கு மிகுபுகழ் என்றே பொருள் தந்துள்ளது.

## வரையறை தன்மையில் விளக்குதல்

நூற்பாக்கள் சில அடைதராமல் இரு சொல்லால் ஒரு பொருளை உணர்த்தலும் உண்டு.

தூயவென் கிளவி யறிவின் றிரிபே
(சொல்–368)
வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம் (சொல்–371)

இவற்றை ஒருவகையில் வரையறை தன்மையில் பொருள் விளக்கம் செய்துள்ளதாகவும் கொள்ளமுடிகிறது.

தொல்காப்பிய நூற்பாக்களிலிருந்து அகராதியியலுக்குப் பயன்படுத்திக் கொள்ளும் முறையில் வருவித்துக் கொள்ளப்பட்டுள்ள சில தகவல்கள் இந்த இரண்டாவதுபகுதியில்சிலதலைப்புகளின் கீழ் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

## 1. அகராதிக்கு உரிய சொல் தேர்வு

தலைச்சொல் தேர்வு குறித்த ஓரிரு கருத்துகளைத் தொல்காப்பியர் நூற்பாக்கள் வழி காணலாம்.

## அ. வழக்கில் இருக்கும் ஒத்த சொற்களை ஏற்றல்,

குரங்கி னேற்றினைக் கடுவ
னென்றலும்
மரம்பயில் கூகையைக்
கோட்டானென்றலுஞ்
செவ்வாய் கிள்ளையைத்
தத்தையென்றலுங்
வெவ்வாய் வருகினைப் பூசை
யென்றலுங்
குதிரையு ளாணினைச்
சேவலென்றலும்
இருணிறப் பன்றியை யேன
மென்றலும்
எருமையு ளாணினைக் கண்டி
யென்றலும்
முடிய வந்த வழக்கி னுண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே
(பொருள்–624)

என்ற நூற்பா சில உயிரினங்களின் வேறு பெயர்களாகத் தொல்காப்பியார் காலத்து வழங்கி வந்தவைகளைத் தொகுத்துள்ளது.

## ஆ.விகார வடிவங்களை ஏற்றல்

அந்நாற் சொல்லுந்தொடுக்குங்காலை
வலிக்கும் வழி வலித்தலும்
மெலிக்கும் வழி மெலித்தலும்
விரிக்கும் வழி விரித்தலுந்
தொகுக்கும் வழி தொகுத்தலும்
நீட்டும் வழி நீட்டலுங்
குறுக்கும் வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய வென்மனார் புலவர்
(சொல்–403)

'நாற்சொல்' எனக்குறிக்கப்பட்டவை இயற்சொல், திரிசொல். திசைச்சொல், வடசொல் என்பவை. அவை செய்யுளில் வரும்போது அவற்றில் வலித்தல், மெலித்தல், விரித்தல், தொகுத்தல், நீட்டல், குறுக்கல் போன்ற திரிபுகளைப் புலவர் ஒருவர் செய்திருந்தால் அத்திரிபுகள் ஏற்றுக் கொள்ளக் கூடியனவே எனக்கூறுகிறது இந்நூற்பா.

## இ.பெயரடை வினையடை பற்றிய சிந்தனை

தலைச்சொல் தேர்வுக்குரிய பெயரடை வினையடை குறித்த சிந்தனையைப் பின்வரும் நூற்பா தெரிவிக்கும் கருத்தின் எதிர்மறையிலிருந்து பெற முடிகிறது.

பெயரெஞ்சு கிளவியும்
வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும்
பொருணிலை திரியா திரியா
(சொல்–237)

பெயரெச்சம் மற்றும் வினையெச்சம் ஆகிய இரண்டும் எதிர்மறையில் அமைந்தாலும் பொருள் நிலையில் திரியாது வரும். அதாவது 'உண்டசோறு' என்பதிலும் 'உண்ணாத சோறு' என்பதிலும் 'உண்டு வந்தான்' என்பதிலும், 'உண்ணாது வந்தான் என்பதிலும்', உடன்பாட்டு, எதிர்மறை வடிவங்களில் பொருள் மாறுபடுவதில்லை என மேற்கண்ட நூற்பா வழி அறிகிறோம்.

## 2. பொருள் வரையறை செய்யும்முறை

### அ. நேர்மறைக்கூறு எதிர்மறைக்கூறு இரண்டையும் வரையறையில் தருதல்

வினையெனப் படுவது வேற்றுமைக்
கொள்ளாது
நினையுங் காலை காலமொடு
தோன்றும் (சொல்–201)

வினை என்பதன் இலக்கணத்தைத் தரும் இந்நூற்பாவில் வினை என்பதன் வரையறை இருகூறுகளைக் கொண்டுள்ளது. நேர் கூறாகிய 'காலமொடு தோன்றும்' எனபதும் எதிர்மறைக் கூறாகிய 'வேற்றுமை கொள்ளாது' என்பதும் இணைந்து பொருள் விளக்கம் செய்யப்பட்டுள்ளது.

### ஆ. உவமை கூறி விளக்குதல்.

சூத்திரந் தானே
ஆடிநிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமை
யாத்தமை யதுவே (பொருள்–481)

என்ற செய்யுளியலில் இடம் பெற்றுள்ள நூற்பாவில் 'ஆடி நிழலினறியத் தோன்றி' என உவமையைப் பயன்படுத்தியுள்ளார். சூத்திரமானது படித்த அளவில் ஆராய்தல் இல்லாமல் பொருள் தெரிந்து கொள்ளும்படி இருக்க வேண்டும் என்பதற்கு இணையாக கண்ணாடியில் தெரியும் பிம்பம் உவமையாகப் பயன்டுத்தப்பட்டுப் பொருள்விளக்கம் செய்யப்பட்டுள்ளது.

### ஆ.இணைச்சொற்களில் ஒன்றின் வரையறையால் முக்கிய கூறுபாட்டைக் கூறுதல்

அடிதொறுந் தலையெழுத்தொப்பது
மோனை (பொருள்–405)

'அடிதோறும் முதலெழுத்து ஒன்றிவருவது' என்னும் பொருட்கூறுபாடு வரையறைக்குக் காட்டப்பட்டுள்ளதற்குக்

காரணம் எதுகை என்பதனோடு ஒப்பிடப்பட்டிருப்பதலாகும், ஒப்பீடு மோனையின் தலையாய கூறு எது என்பதைத் தீர்மானிக்கிறது.

### 3.சொற்கள் உணர்த்தும் பொருளைப் புரிந்துக் கொள்ளல்

### அ.பலபொருள் ஒரு சொற்களின் பொருளைப் புரிந்துக் கொள்ளுதல்.

வினைவேறு படூஉம்பல
பொருளொரு சொல்
வேறுபாடு வினையினு மினத்தினுஞ்
சார்பினுந்
தேறத் தோன்றும் பொருடெரி
நிலையே (சொல்–53)

உரையாசிரியர் சேனாவரையரது எடுத்துக்காட்டுகள் இக்கருத்தை நமக்கு நன்கு புலப்படுத்துகின்றன. மா என்பது மாமரத்தையும்,குதிரையையும்,வண்டையும் குறிக்கப் பயன்படுகிறது. மா என்னும் பலபொருள் ஒரு சொல் 'பூத்தது' என்னும் வினையை ஏற்றால் மாமரம் என்னும் பொருள் அந்த வினையால் உணர்த்தப்படுகிறது. அதே மா என்னும் செல் 'ஓடியது' என்னும் வினையை ஏற்பின் குதிரை என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது பெறப்படும்.

### ஆ. ஒரு பொருள் பல சொற்களைப் பகுத்துக் காணல்

ஒரு பொருள் பல சொற்களின் வருகையைப் பகுத்துக்காணும் முயற்சி ஒன்றைத் தொல்காப்பியர் மேற்கொண்டுள்ளார்.

ஈதா கொடுவெனக் கிளக்கு மூன்றும்
இரவின் கிளவி யாகிட னுடைய
(சொல்–444)
அவற்றுள்,
ஈயென் கிளவி யிழிந்
தோன்கூற்றே (சொல்–445)
தா வென் கிளவி யொப்போன் கூற்றே
(சொல்–446)
கொடுவென் கிளவி யுயர்ந்தோன்
கூற்றே (சொல்–447)

என்னும் நூற்பாக்கள் ஈ, தா, கொடு என்னும் மூன்று சொற்களும் ஒரே பொருளைக் கொண்டன. எனினும், யார் யாரிடம் கொடுப்பது, பெறுவது என்னும் அடிப்படையில் அவற்றின் வருகை அவர்காலத்து மொழியில் இருந்திருப்பதைக் கவனித்துப் பதிவுசெய்துள்ளார்.

### முடிவுரை

தொல்காப்பிய இலக்கணம் என்பது தொல்காப்பியர் காலத்து வழங்கிவந்த மொழியின் விவர இலக்கணமாகவோ அல்லது விதிமுறை இலக்கணமாகவோ பார்க்கப்படுவது போல அதனை வேறு கோணங்களிலும் அணுகும்போது நுண்ணிய கருத்து புலப்படுவது திண்ணம், அகராதியியல் கண்ணோட்டத்தில் தொல்காப்பியத்தை வாசிக்கும்போது அகராதியியலுடன் தொடர்புடைய கூடுதலான செய்திகள் கிடைக்கக்கூடும். ஈடுபாடும் தருக்கமுறையும் அத்தகைய முயற்சிக்குத் தேவையானது.

### துணை நூற்பட்டியல்

1. கனகசபாபதி பிள்ளை, எஸ். (பதிப்பாசிரியர்) 1934, தொல்காப்பியப் பொருளதிகார முதற்பாகம் (நச்சினார்க்கினியம்) சென்னை.

2. சுந்தரமூர்த்தி.கு (பதிப்பாசிரியர்) 1981 தொல்காப்பியச் சொல்லதிகாரம் சேனவரையம், அண்ணாமலை பல்கலைக்கழகம் , சிதம்பரம்.

3. வேங்கடராமையா, கே.எம். சுப்பிரமணியன் ச.வே.நாகராஜன் ப.வே. (பதிப்பாசிரியர்கள்) 1996.

4. நாச்சிமுத்து கி.2007 தொல்காப்பியக் கட்டுரைகள் சொல், போராசியர் கி.நாச்சிமுத்து மொழி பண்பாடு ஆய்வு நிறுவனம் கோவை.

# பன்மொழி அகராதி – குறுஞ்செயலி






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் தமிழைப் பிறமொழியினருக்குக் கற்பிக்கும் வகையில் திராவிட மொழிகள் உட்பட பிற மொழிகளில் பாடநூல்களும் பன்மொழி அகராதியுடன் தமிழ் கற்பிக்கும் குறுஞ்செயலிகளும் உருவாக்குதல் தொடர்பான 3 ஆவது கூட்டம் 14.03.2022ஆம் நாள், நடைபெற்றது. இக்கூட்டத்தில் மொழிபெயர்ப்புத் துறை மேனாள் துணை இயக்குநர் முனைவர் கு.பாலசுப்பிரமணியம் சென்னைப் பல்கலைக்கழகக் கன்னடத் துறைத் தலைவர் முனைவர் தமிழ்ச்செல்வி, தெலுங்குத் துறை மேனாள் தலைவர் முனைவர் சம்பத்குமார், இந்தித் துறைப் பேராசிரியர் முனைவர் சரசுவதி, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் மற்றும் இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் பங்கேற்றனர்.

# சமூகநலன் மற்றும் மகளிர் உரிமைத் துறையில் புதிய கலைச்சொற்கள் – கலந்தாய்வுக் கூட்டம்





சென்னை, பனகல் மாளிகையில் உள்ள சமூகநலன் மற்றும் மகளிர் உரிமைத் துறையில் (14.03.2021) திங்கள்கிழமை துறைசார் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் நடைபெற்றது.

# நகராட்சி நிருவாகத் துறையில் புதிய கலைச்சொற்கள் – கலந்தாய்வுக் கூட்டம்





சென்னை, நகராட்சி நிருவாக அலுவலகத்தில், நகராட்சி நிருவாகத் துறைசார் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் 18.03.2021 வெள்ளிக்கிழமை நடைபெற்றது.

# சென்னைப் பெருநகர் குடிநீர் வழங்கல் மற்றும் கழிவுநீரகற்று வாரியம் சார்ந்த புதிய கலைச்சொற்கள் – கலந்தாய்வுக் கூட்டம்





சென்னை, நகராட்சி நிருவாக அலுவலகத்தில் உள்ள சென்னைப் பெருநகர் குடிநீர் வழங்கல் மற்றும் கழிவு நீரகற்று வாரியம் சார்ந்த புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் (25.03.2021) வெள்ளிக்கிழமை நடைபெற்றது

# தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை
# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
# அகரமுதலித் திட்ட இயக்ககம் வழங்கும்
# தேவநேயப் பாவாணர் விருது– 2021



தேவநேயப் பாவாணர்





முனைவர் கு.அரசேந்திரன்

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் 2021ஆம் ஆண்டுக்கான "தேவநேயப் பாவாணர் விருதினை" முனைவர் கு. அரசேந்திரன் அவர்களுக்கு மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க.ஸ்டாலின் அவர்கள் 15.03.2022ஆம் நாள் தம் பொற்கைகளால் வழங்கிச் சிறப்பித்தார்.விருதுத்தொகையான ரூ.இரண்டு இலட்சத்திற்கான காசோலை,தங்கப்பதக்கம்,தகுதியுரை மற்றும் பொன்னாடை ஆகியவையும் வழங்கப்பட்டன.*

முனைவர் கு.அரசேந்திரன் அவர்கள் அரியலூர் மாவட்டத்திலுள்ள கொக்கரணை என்ற சிற்றூரில் 12.07.1955ஆம் ஆண்டு பிறந்தவர். சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முதுகலை, முனைவர் பட்டம் பெற்றவர். சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர். திரு.வ.சுப.மாணிக்கம், திரு. வெள்ளைவாரணர் போன்ற தகைசால் தமிழறிஞர்களிடம் பைந்தமிழ் பயின்ற பண்பாளர். இளங்கலை படிக்கும் காலந்தொட்டே 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணரைப் படித்து உள்வாங்கி அவர்வழியில் வேர்ச்சொல்லாய்வைத் தொடர்ந்து செய்துவருபவர். உலகம் பரவிய தமிழின் வேர் – கல், கால் – அடி – தாள் சொல் வரலாறு, உடல் உறுப்புச் சொற்கள், கம்பச்சித்திரம், தமிழ்க் கப்பல், தமிழறிவோம், உயிர்க்கதறல் உள்ளிட்ட நூல்களின் ஆசிரியர். மேலும், 50க்கும் மேற்பட்ட அகராதியியல் கட்டுரைகளை எழுதியவர். குறிப்பாக, தமிழுக்கும் வடஇந்திய மொழிகளுக்கும் இடையிலான வேர்ச்சொல், இலக்கண உறவுகள் பற்றி செம்மொழித் தமிழாய்வு நடுவண் நிறுவனத்திற்கு இரண்டு ஆய்வறிக்கைகளை வழங்கியவர். தேசிய மற்றும் பன்னாட்டுக் கருத்தரங்குகளில் பங்கேற்றுச் சொல்லாய்வு குறித்த கட்டுரைகளை வாசித்தவர். தமிழ்நாடு அரசின் சிறந்த நூலுக்கான பரிசுகளைப் பெற்றவர். தமிழ் அகராதியியலில் தனக்கென்று தனி முத்திரையைப் பதித்துவருபவர். கலைச்சொல்லாக்கத்தில் பாவாணர் கோட்பாடுகளை உள்ளடக்கிச் செயற்பட்டுவருபவர்.

# தமிழ்க் கலைக்கழகக் கூட்டம்







தமிழ்க் கலைக்கழகத்தின் 105,106ஆவது கூட்டத்தில் முறையே 177+249=426 சொற்கள் ஏற்பு. கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா. கு. ஆல்துரை, திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன், கலைக்கழக அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.

## வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி – களாய்வு



**கோவை மண்டிலம்**



**திருச்சி மண்டிலம்**



**சென்னை மண்டிலம் (ஜவ்வாதுமலை)**



**திருநெல்வேலி மண்டிலம்**



**மதுரை மண்டிலம்**

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

மொழியின் வளம் காட்டும் அளவுகோல் அதன் சொற்களே ஆகும். அருந்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் நெறிப்படுத்தலில், 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 24– 27 வரையிலான அமர்வுகள் 2022 மார்ச்சு 11, 18, 25, ஏப்பிரல் 01 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களும் மேற்கொண்டனர்.

**11.03.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**

திரு. நிகவெவெ சுமங்கல தேரர்
பௌத்த மற்றும் பாலி பல்கலைக்கழக மாணவர், இலங்கை



முனைவர் சொ. மீனா
தமிழ்த்துறைத் தலைவர், சுடாக்கோம் தமிழ்ச் சங்கம், சுவீடன்



திரு. நடராசா சுசீந்திரன்
மொழிபெயர்ப்பாளர், எழுத்தாளர், ஜெர்மனி



பொறிஞர் சத்யன்
மின்பொறியியல் மேற்பார்வையாளர், குவைத் தேசிய கன்னெய் தூய்விப்பாலை, குவைத்



முனைவர் மு. மகேசுவரி
அழைப்பு விரிவுரையாளர், அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி, வேதாரண்யம்



**18.03.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**

பேரா. மரு. மு. செம்மல்
முதன்மை அறிவியல் ஆலோசகர், மெய்ந்நிகர் அறிவியல் ஆய்விருக்கை, சவூதி அரேபியா




முனைவர் செல்வரூபி ஸ்கந்தராஜா
மேனாள் துணை தேர்வாணையாளர், தேர்வுத் திணைக்களம், இலங்கை



முனைவர் விஜய் அசோகன்
அறிவியல் ஆராய்ச்சியாளர், லிமரிக் பல்கலைக்கழகம், அயர்லாந்து



முனைவர் அ.போ. இருங்கோவேள்
பேராசிரியர் – மருத்துவ சமூகவியல் மற்றும் தமிழ் இலக்கியம், சங்கர நேத்ராலயா, சென்னை



திரு. அகநம்பி
எழுத்தாளர், வெளியீட்டாளர், கல்பாக்கம், சென்னை



## 25.03.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

திரு. ரஷீத் எம். இம்தியாஸ்
மூத்த வழக்கறிஞர், இலங்கை



திருமதி டில்குஷா கெங்ககுமார்
தமிழ்ப்பள்ளி முதல்வர், ஆசிரியர்,
சுவிட்சர்லாந்து கல்விச் சேவை



திரு. அகநம்பி
(எ) தி. பாலசுப்பிரமணியன்
எழுத்தாளர், வெளியீட்டாளர்,
கல்பாக்கம், சென்னை



செல்வன் நிஷோக் மகிழ்வண்ணன்
இளம் இலக்கியவியல் – தமிழ்
மூன்றாமாண்டு, தமிழ்க் கல்லூரி
பேரூர்



## 01.04.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

அருள்திரு செ. அன்புராசா
இயக்குநர், கல்வி வளசார் நிலையம்,
இல்லம்" கிளிநொச்சி, இலங்கை.



முனைவர் மெய். சித்ரா
பகுதிநேர விரிவுரையாளர்,
ஸ்கோப் ஹாங்காங் மாநகர்
பல்கலைக்கழகம்,
ஹாங்காங்



மரு. கோ. அருண்பிரகாஷ்
(குழந்தைகள் நலம்)
இணைப்பேராசிரியர், விநாயகா
மிஷன்ஸ் மருத்துவக் கல்லூரி,
காரைக்கால்



திரு. ஜா. மனோஜ்குமார்
கட்டுடல் பயிற்சியாளர், சென்னை.



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

### திரு. நிகவெவெ சுமங்கல தேரர்

Eternalism – அழியாமை
Non – Existense – இருப்பு இல்லாமை
Great way– பெரியவழி அல்லது உயர்ந்த வழி
Mindfulness– நற்சிந்தனை
Right Activity – நற்செய்கை

### முனைவர் சொ. மீனா

Paternity Leave– தந்தை மகப்பேறு விடுப்பு
Living In Mom's Home– தாய்வீடுறைதல்
Hemming– செருமல்.
Snack Bar – வீதியடுக்களை
Mobile daycare– கைபேசி பேணுமிடம்

### திரு. நடராசா சுசீந்திரன்

Transformation – மாற்றுநிலையாக்கம்
Analytical Conversation –ஆய்வுரையாடல்
Philosophy Of Mind – மனமெய்யியல்
Philosophy Of Psychology –உளமெய்யியல்
Philosophy Of language –மொழிமெய்யியல்

### பொறிஞர் சத்யன்

Rectifier – அலைமின் திருத்தி,
Stepper Motor – படிமுறை மின்னோடி
Analog signal– தொடர்மாறி அலைப்படிமம்,
Digital signal– மின்னீரிலக்க அலைப்படிமம்
Module – தொகுநிலையுதிரி

### முனைவர் மு. மகேசுவரி

Soil corrector– மண் திருத்தி
Former– தொழுவர்
Soil Silo– மண்குதிர், தானிய மண் கூடு, குளுமை,
Irrigation Bucket – நீரேற்றிக்குடுவை
Well Pulley – சுழலி

### பேரா. மரு. மு. செம்மல்

Abatement – தணித்தல்
Abarognosis – சுமை உணர்வின்மை

Abacterial – F21 – நுண்ணுயிரற்ற, பாக்டீரியா சாராத வீக்கம்
Aaron's sign – F37 – ஆரனின் குறியீடு
Abarthrosis – அசையும் மூட்டு

**முனைவர் செல்வரூபி ஸ்கந்தராஜா**

Diagnostic Assessment– ஆய்ந்தறி கணிப்பீடு
Assessment for learning–கற்றலுக்கான கணிப்பீடு
Summative Assessment –தொகுத்தநிலைக் கணிப்பீடு
Performance assessment –ஆற்றுகைக் கணிப்பீடு
Validation– தகுதியை உறுதிப்படுத்தல்

**முனைவர் விஜய் அசோகன்**

Electron Diffraction – எதிர்மின்னி விளிம்பு விலகல், எதிர்மின்னி விளிம்பு விரவல்
Scanning Electron Microscopy – வரியோட்ட எதிர்மின்னி நுண்ணோக்கி
Transmission Electron Microscopy – எதிர்மின்னி ஊடறுப்பு நுண்ணோக்கி, ஊடுசெல் எதிர்மின்னி நுண்ணோக்கி
Atom Probe Tomography – முப்பரிமான அணு வேதியாய்வு, முப்பரிமான அணு வேதிப்படம், முப்பரிமான அணு வேதிப்பதிவு
Scintillography – மருத்துவ மிளிர்படம், மருத்துவ மிளிராய்வுப் படம், கதிரியக்க மிளிர்படம், கதிரியக்க அடர்வு படம்

**முனைவர் அ.போ. இருங்கோவேள்**

Aberrometry –ஒளிக்கதிர் பிறழ்வுமானி
Applanation Tonometry–கண்நீர் அழுத்த மானி
Ophthalmoscopy –விழி உள் நோக்கி
Keratometry –விழிவெண்படலமானி
Computer Vision Syndrome – கணினிப் பார்வை நோய்க்குறி

**திரு. அகநம்பி (எ) தி. பாலசுப்பிரமணியன்**

exchange Copy = பரிமாற்ற இதழ்
Lead = உள்ளடக்கக் குறிப்பு
Ghost writer = நிழலுரு எழுத்தர்
Trim = மெருகூட்டல்
Skyline = உச்சிவரி

**திரு. ரஷீத் எம். இம்தியாஸ்**

Declaration Deed – விளம்பலுறுதி
Prescriptive – காலவிதிப்பு
Referendum – மக்கள் தீர்ப்பு
Exparte – மறுகட்சியின்றி
Discretion – தற்றுணிபு

**திருமதி டில்குஷா கெங்ககுமார்**

Theory –தெரிவியல்
Practice–புரிவியல்
Cauliflower – காற்பூ
Edelweiss – தேவப்பூ
Thanksgiving – அறுவடைவிழா

**திரு. அகநம்பி (எ) தி. பாலசுப்பிரமணியன்**

Paragraphia = சொல் மறதி
Paralogia = முறையற்ற பேச்சு
Agraphia = எழுதும் திறன் இழப்பு
Hypomania = மாற்றுநிலை பித்தம்
Mind perception = மனக்காட்சி

**செல்வன் நிஷோக் மகிழ்வண்ணன்**

Cache –மறைதேக்கம்
Optimizer–உகப்பாக்கி
Fontology– எழுத்துருவியல்
Block list –முடக்குப் பட்டியல்
Mute –ஒலியடக்கு

**அருள்திரு செ. அன்புராசா**

Persicution – சமயத் துன்புறுத்தல்
Fellowship – ஒன்றிப்புறவு
Eschatology – நிறைவியல்
Apostasy – தம்சமய மறுப்பு
Ascension – விண்ணேற்றம்

**முனைவர் மெய். சித்ரா**

Epistle – பாமடல்
Redaction – படியுருதிருத்தம்
Humorism – தொல் மனிதவுடலியல்
Bestride – ஆதிக்கம் செலுத்துதல்/ மேய்தல்
Cartographic – வரைபடவரைவியல்

**மரு. கோ. அருண்பிரகாஷ்**

Short stature – குறை உயரம்
Vein – கருங்குருதி நாளம்
Artery – செங்குருதி நாளம்
Nephrotic syndrome – சிறுநீரகப் பேரொழுக்கு
Chest physiotherapy – மார்கூட்டின் இயன் மருத்துவம்

**திரு. ஜா. மனோஜ்குமார்**

Crab walk – நண்டு நடை
Penguin walk – ஒயிலி நடை, ஒயில்நடைப் பறவை நடை
Crocodile walk – முதலை நடை
Caterpillar walk – கம்பளிப்பூச்சி நடை
Elephant walk – யானை நடை